# இராஜா தோடர்மால்

## ஓர் இனிய சரிதக் கதை

மாணவர் பதிப்பு



ஆசிரியர் திரு அ. கந்தசாமிப் பிள்ளை

V. S. வெங்கடராமன் கம்பெனி

பப்ளிஷர்ஸ் : : கும்பகோணம்

# இராஜா தோடர்மால்

— ஓர் இனிய சரிதக் கதை —

[ மாணவர் பதிப்பு ]

திருவாளர், அ. கந்தசாமிப் பிள்ளை

தமிழ்ப் பண்டிதர்

துரைத்தனக் கல்லூரி, கும்பகோணம்



துரைத்தனத்தார் அங்கீகரித்தது

[23-5-'50 கெஜட்டின் (Part II) 113-ம் பக்கம் பார்க்க]

V. S. வெங்கடராமன் கம்பெனி

பப்ளிஷர்ஸ் : : கும்பகோணம்



[ விலை 12 அணா

# மாணவர் பதிப்பு முன்னுரை

இராஜா தோடர்மால் என்னும் இச் சரிதக் கதையின் முதற் பதிப்பு 1934-ல் வெளியிடப்பட்டது. வெறும் புனைகதையா யின்றிச் சரித்திரத்தோடு இயைபுற்றிருக்கும் இந்நூல், பாடசாலை மாணவர்க்கு உப பாட புத்தகமாகப் பயன்படுமாறு **மாணவர் பதிப்பு** இதுபோழ்து வெளியிடப்படுகிறது.

பயிலும் மாணவர்க்குச் செவ்விய தமிழ் நடை பிடிபடவும், உயரிய கருத்துக்களும் சீரிய ஒழுக்கமும் மனத்திற் பதியவும் செய்யவல்லது இந்நூல். மாணவர் பதிப்பென்னும் பெயர்க் கேற்ப இதன்கண் படங்கள் உரிய இடங்களில் சேர்க்கப்பட்டிருக்கின்றன; அநுபந்தமாக அரும் பதவுரையும் இறுதியிற் சேர்க்கப்பட்டுள்ளது.

இந்நூல் மாணவர்க்குப் பெரிதும் பயன் தருமென்னும் உறுதியுடையேன்.

துரைத்தனக் கல்லூரி<br>கும்பகோணம்<br>20—6—1935

அ. கந்தசாமிப் பிள்ளை<br>தமிழ்ப் பண்டிதர்

# அட்டவணை

# இராஜா தோடர்மால்

## தோற்றுவாய்

பல்வளம் பொலிந்த பாரதநாட்டின் இதயமென்ன இசைத்திடும் தகையது, மங்கலில் புகழ்பெறும் வங்க நன்னாடு. இது இப்போது வங்காளம் என்று பெயருடையது. இவ்வங்க தேசத்தையும், இதனை யடுத்த பீஹார் முதலிய நாடுகளையும் கி. பி. 1204-ம் ஆண்டு வரை பண்டைக்கால இந்திய மன்னர்கள் மநுநீதி தவறாது செங்கோல் ஓச்சிவந்தனர். பிறகு டில்லியைக் கைப்பற்றி அரசு புரிந்த பட்டாணியர்கள் இந்நாடுகளை வென்று கி. பி. 1574 வரை அரசியல் நடாத்தினர். பட்டாணியர்களது ஆட்சிமுறை, ஐரோப்பாவில் வழங்கிய உம்பளத் திட்டம் (Feudal System) என்பதைப் பெரும்பாலும் ஒத்திருந்தது. இவர்கள் பல சமயங்களில் தாங்களே சுயாதிகாரிகளாகவும், சில சமயங்களில் டில்லிப் பேரரசின் கீழ்ச் சிற்றரசுகளாகவும் அமர்ந்து அந்நாடுகளை யாண்டனர்.

முடியுடை மன்னன் முடியின், அரசிளங் குமரன் சிங்காதனமேறுவது சிறுபான்மையும், புயவலி மிக்க சேனைத் தலைவன் சேனையையும் அரசையும் கைப்பற்றி ஆட்சி புரிவது பெரும்பான்மையும் நிகழும். தேசத்தின் யாதேனுமோர் முக்கிய பாகம் மன்னனது நேராட்சியி லிருக்கும்; மற்றைய பாகங்களெல்லாம் பேரதிகாரிகளால் ஆளப்பெறும். இவ்வதிகாரிகளும் தத்தம் ஆட்சி நிலங்களைப் பற்பல பாகங்களாகப் பிரித்துத் தமக்குக் கீழ்ச் சிற்றதிகாரிகள்பால் விடுவர். இவ்வதிகாரிகள், காவலன் வலியனாயின் அவனது ஆணையைச் சிரமேற்கொண்டும், எளியனாகுங்கால் அவனை அடக்கித் தமதாணையைச் செலுத்தியும் வருவர். " அறுப்பவனுடையது அரிவாள் " என்னும் பழமொழிக் கேற்பவே அக்கால அரசியல் நிகழ்ந்துவந்தது.

பட்டாணியர்களது பேரரசின்கீழ்ப் பல இந்து ஜமீன்தார்கள் தோள் வலியும், சீரும் சிறப்பும், செல்வாக்கும், அதிகாரமும், நன்மதிப்புமுள்ளவர்களாய்த் திகழ்ந்தனர். பின்பு, மொகலாயர்கள் டில்லிக்குச் சக்கரவர்த்திகளாகி வங்காள தேசத்தைத் தமது ஆட்சியிற் சேர்த்துக்கொண்டனர். அக்காலத்திலும் இவ்விந்திய ஜமீன்தார்களது அதிகாரம் குன்றவில்லை. பொதுவாக ஜமீன்தார்கள் **காயஸ்த** குலத்தினர். உண்மையில் இவர்கள் தாம் வங்க நாட்டின் அரசர்களாக விளங்கினர். குடிகளனைவரும் இந்த ஜமீன்தார்களேயே யடுத்து வாழ்ந்தனர். கலகக்காரர், கொள்ளைக்காரர், கள்வர் முதலிய குற்றவாளிகளைத் தண்டித்து அடக்குவதும், நாடெங்கும் அமைதி நிலைபெறச் செய்வதும், நியாயம் வழங்குவதும், குடிகளின் நன்மை தீமைகளைக் கவனிப்பதும், பிறவுமான கோன்முறை அனைத்தும் ஜமீன்தார்களாலேயே நிறைவேற்றப்பெற்றன. இவர்களது அரிய பெரிய செயல்களையும், நீதி வழுவா நெறியினையும் வங்கதேச சரித்திரம் நன்கு எடுத்தியம்பும்.

பட்டாணிய மன்னர்களில் கடைசியாக வங்காளத்தில் அரசு புரிந்தவர் **தாவுத்கான்** என்போர். இவர் பட்டத்திற்கு வந்த மறு வருடமாகிய கி. பி. 1574-ல் **அக்பர்** சக்கரவர்த்தி அந்நாட்டின்மீது படையெடுத்துவந்து, பாட்னு நகரத்தைக் கைப்பற்றி, அங்கு **மனுயீம்கான்** என்பவரை முக்கிய சேனுதிபராய் நியமித்துவிட்டு டில்லி நகரம் மீண்டனர். மனுயீம்கான் என்பவர் பெயருக்குத்தான் சேனுதிபர். உண்மையில், க்ஷத்திரிய சூடாமணியாகிய **இராஜா தோடர்மாலே** பட்டாணியர்களை வென்று வங்காளத்தைக் கைப்பற்றியவர். தாவுத்கான் பன்முறையும் தோல்வியுறுமாறு பொருது கடைசியாய்க் **கட்டக்கில் (Cuttack)** நிகழ்ந்த கன கோரமான சமரில் வெற்றிபெற்றவரும் அவரே. அதனுல் அப் பட்டாணிய மன்னர் **ஒரிஸ்ஸா** நாட்டை மட்டும் தம் அதிகாரத்தில் நிறுத்திக்கொண்டு வங்காளம், பீஹார் என்னும் மாகாணங்களை மொகலாயருக்கு அளித்தனர்.

அவர்களுக்குள் நிகழ்ந்த ஒப்பந்தப்படி சகல ஏற்பாடு களுஞ் செய்தபிறகு இராஜா தோடர்மால் டில்லி நகரத்திற்குத் திரும்பிச் சென்றூர். அவர் அங்கு ஏகினதும் **தாவுத்கான்** என்பவர் சமாதான உடன்படிக்கையின் நிபந்தனைகளை யெல்லாம் புறக்கணித்து வங்காளத்தை மறுபடியும் தம் வயப் படுத்திக்கொண்டனர். பிறகு 1576-ம் வருடத்தில் பேரரசராகிய அக்பர், **ஹுசேன்** குலீகானைச் சேனுதிபதியாக நியமித்துத் தாவுத்கானை அடக்கும்பொருட்டு அனுப்பினூர். இந்த ஹுசேன் குலீகான் மனுயீம்கானுடைய சகோதரர். இராஜா தோடர்மா லும் அவரோடுகூட அனுப்பப்பட்டிருந்தார். தோடர்மால் இரண்டாவது முறை வங்காளத்தின்மீது படையெடுத்துச் சென்று **இராஜ மஹாலில்** நடந்த பெரும்போரில் தாவுத்கானை முற்றிலும் தோல்வியுறச் செய்து அவரை அமர்க்களத்தில் சாசுவதமாகப் படுக்கவைத்தனர். இதனுல் வங்காளம் முழுவதும் மொகலா யர்களுடைய ஆட்சியில் வந்தது. பின்பு மன்னர் மன்னரான அக்பர் ஹுசேன் குலீகானை இப்பிரதேசத்தின் சுபேதாராகி நியமித்தார். தோடர்மால் மீண்டும் டில்லி நகரத்திற்கேகினர்.

1580-ம் ஆண்டில் வங்காளத்தில் மறுபடியும் பயங்கர மான சண்டை சச்சரவுகள் ஏற்பட்டன. இவை உள்நாட்டுக் கலகங்களே. அக்பரால் நியமிக்கப்பட்ட மொகலாய சேனுதிபதி களும், வேறு சில மொகலாய வீரர்களுமே இச் சண்டையைக் கிளப்பினர். அச்சமயத்தில் நிகரற்ற மதிநுட்பமும், பெருந் தன்மையும், நீடிய ஆலோசனையும் வாய்ந்த இந்திய வீரராகிய இராஜா தோடர்மாலையே முக்கிய சேனுதிபதியாகவும், வங்காள தேசத்துச் சுபேதாராகவும் அக்பர் நியமித்து அங்கு அனுப்பினூர்.

இவ்வீர ஆடவர் மூன்றும் முறை வங்காளத்தை வென்று வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா என்னும் முந்நாட்டின் அரசியலை யும் எவ்வாறு செவ்வனே நடத்தினூரென்பதும் 16-வது நூற்றூண்டி னிறுதியில் இந்தியர், மகம்மதியர், ஜமீன்தார்கள், குடிகள் இவர்களுள் எத்தகைய ஒற்றுமை வேற்றுமைகளிருந் தனவென்பதும் சரித்திரக் கலப்புள்ள இக்கதையில் நன்கு விளங்கலாகும்.

---

# இராஜா தோடர்மால்

---

## அதிகாரம் 1 :—வீர நோன்பு

பூவுலகனைத்தும் பொன்னுலகாக விளங்கொளி பரப்பிய பகலவன் மேலைக்கடல் குளித்து நெடுநேரமாயிற்று. இந்நள்ளிரவில் வங்காள நாட்டின் நதீயா ஜில்லாவில் பாய்ந்தோடும் இச்சாமதி என்னும் நதி, தனது முழுப் பெருக்குடன் அதி வேகமாய்ச் சென்றுகொண்டிருந்தது. அங்கு மலர்ந்த பாரிசாதம் முதலிய மலர்களின் நறுமணம், மெல்லென உலவுங் காற்றோடு கலந்து கமழ்ந்தது. அன்று சுக்கில பக்கப் பதினன்காம் இரவாக இருந்தும், விண்ணிடைத் தோன்றிய மேகங்களால் காசினியெங்கும் காரிருள் கவிந்திருந்தது. மரஞ் செடி கொடிகளின்மீது பற்றித் தங்கியிருக்கும் மின்மினிப் பூச்சிகள் அந்த அந்தகாரத்தில் தீப் பொறியினமெனத் திசைதொறுந் திகழ்ந்தன. மரங்களினிடையே வீசிவரும் காற்றினெலியும் இச்சாமதி யாற்றினெலியும் தவிர வேற்றெலி ஒன்றுங் கேட்கப்படவில்லை. உலக முழுதும் பெரு நித்திரையிலாழ்ந்திருந்தது.

ஊரோசை யடங்கியபின் நள்ளிருளிற்கும், குளிர் காற்றிற்குஞ் சற்றும் மனங் கலங்காது, அந்த இச்சாமதி நதியில் நீராடி, வெண் துகிலுடுத்துத் தன்னந் தனியே வன மலர்களைக் கொய்துகொண்டு அங்கு ஓர் ஆலமரத்தின்

கீழிருக்கும் ஆலயத்தினுட்புகும் அந்த மாதர் திலகம், மகா சுவேதை என்னும் பெயரினள்.



அவள் அக்கோயிலினுள் எழுந்தருளியிருக்கும் இறைவன் திருவுருவின் அருகில் நின்றுகொண்டு, தான் மேற்கொண்ட நோன்பின் நிமித்தம், வந்தனை வழிபாடுகளைத் தொடங்கலாயினள். அங்குச் சிறு விளக்கொன்று மினுக்கு மினுக்கென் றெரிந்துகொண்டிருந்தது. அவ்விளக்கினொளி அப்பெண்மணியை நன்கு புலப்படுத்தியது. தெரிவைப் பருவங்கடந்த அவளுக்கு வயது நாற்பது மட்டுமே. அவளுள்ளத்திற் பற்றியெரிந்து கொண்டிருக்குங் கவலைத் தீயின் பொறிகள் கண் களினின்றும் தெறித்து விழுவனபோல் வெளிப்

பட்டன. பொதுவாக அவ்வனிதையின் உருவம் கம்பீரமும், மனவுறுதியும், சுந்தரமும் வாய்ந்த தாகத் தோன்றிற்று. அவள் தன் மேனியின் அழகுக்கு அழகுசெய்ய வேருேர் அணிகலனையும் அணியாமலும், தூய வெண் துகில் புனைந்தும் இருந்த தோற்றமானது, அவ்வம்மை ஒரு கைம்மை எனச் செம்மையாய்ப் புலப்படுத்தியது. அவள் முகத்தில் தன் குலத்திற்குரிய வீரம் ததும்பிற் றெனினும், பெண்மைக்குரிய அடக்கம், பொறுமை முதலிய குணங்களும் நன்கு விளங்கின. அத் தகைய அருந்தவ அணங்கு, அவ்வாலய மூர்த்தியின் திருமுன் தான் கொணர்ந்த நறுமலரனைத்தையும் அருச்சித்து, நெடுநேரம் துதித்து, வலம் வந்து வணங்கித் தியானத்திலமர்ந்தனள்.

முன்பு மெல்லெலன வீசிக்கொண்டிருந்த காற்று இப்பொழுது பலமுற்றுப் பிரசண்ட மாருத மாக வீசவே அந்த ஆலமரத்தின் செறிந்த கிளை களினின்றும் பேரொலி எழும்பலாயிற்று. கோயில் கதவுகள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டன. விளக்கின் சுடரும் வெடுவெடெனச் சலனமுற்றது. ஆயினும், அந்த நாரியின் சாந்தமும் அமைதியும் வாய்ந்த முகத்தில் தினைத்துணையுஞ் சலனங் காணப்படவில்லை. கண்களை மூடிக்கொண்டு ஒருங்கிய மனத்துடன் ஈசனைத் தியானஞ் செய் வதில் கிட்டத்தட்ட நான்கு நாழிகை வரை அவள் அமர்ந்திருந்தனள். எவ்வகைப் பயன் கருதி இவ் வனிதை இந்நள்ளிரவில் இத்தகைய மனப் பான்மையுடனும் ஒருமையுடனும் வழிபாடு செய்து கொண்டிருந்தனள்?

வழிபாடு முடிந்ததும், அவள் கையில் தீபத்
தைப் பற்றிக்கொண்டு வெளியே வரும் எண்ணத்
துடன் கோயிற் கதவைத் திறந்தனள். திறந்ததும்
அவளேந்திவந்த விளக்கு காற்றினால் அவிந்து
விட்டது அத்தருணம் நடு யாமம்; எங்குங் கோர
மான இருள்; காற்றின் பெருமுழக்கம். இவ்விரா
வேளையில் அவ்வீர மாது சிறிதும் தயங்காமல்
மெல்லென நடந்து பல கவர் வழிகளைக் கடந்து
ஒரு சிறு வீட்டினருகில் வந்து நின்று வாயிற்
கதவைத் தட்டினாள். கதவு திறக்கப்படவே
உள்ளே புகுந்தாள். கையிற்பற்றிய விளக்கோடு
வந்து கதவைத் திறந்த சிறுமி மீளவுங் கதவைத்
தாளிட்டனள்.

வழி நடக்கும்பொழுது மகாசுவேதை கொடிய
சிந்தையில் ஆழ்ந்திருந்தாளெனினும், கதவைத்
திறந்த சிறுமியின் புன்சிரிப்புலாவிய முகக் கமலத்
தைப் பார்த்ததும் தன் அகக் கமலம் சற்றே மலர,
உள்ளத்திற் சிறிது தெளிவும் ஆறுதலுமுற்றனள்.
"குழந்தாய் ஸாரு! இவ்வளவு நேரமாகியும்
இன்னும் விழித்துக்கொண்டிருக்கின்றனையே
சயனித்துக்கொள், போ" என்று மிகு ஆதரத்
துடன் அச்சிறுமியின் முதுகை மகாசுவேதை
தடவினாள்.

ஸாரலா, "அன்னையே! நும் வருகைக்கு
காத்திருக்கிறேன். அதனால் நித்திரையின் நினைவே
எனக்கு வரவில்லை" என்று சொல்லி, விளக்கை
எடுத்துக்கொண்டு படுக்கைக்குப் போகலானாள்.
அதுபொழுது அவளை இமைகொட்டாமற் பார்த்
துக்கொண்டே நின்ற அன்னை, "என் உயிருக்கு

ரான இவ்வரும்பெறல்பணியை, நறுமண மலரைக் கேவலம் வனசோலைக்காகவா நான்முகன் படைத்திருக்கிறன் ?" என்று தனக்குள் சொல்லிக் கொண்டு ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தாள்.

இப்பொழுது ஸாரலாவின் வயது பதினைன்கு எனினும், உடல் வளர்ச்சி சற்றே குன்றியிருந்தமையின், அவளைப் பார்க்கும் எவரும் பன்னீராட்டைப் பருவத்தின ளெனவே மதிப்பர். அவளுடம்பு திருத்தமாயிருந்தது. முகமண்டலத்தில் தெய்வீக மான ஓர் இனிமையும் நேர்மையும் தெளிவாகக் காணப்பட்டன. சிறுமியின் உள்ளமானது சீலம், நேர்மை, நட்பு இவைகளால் நிறைந்திருந்ததென் பதை முகமென்னுங் கண்ணுடி யெடுத்து காட்டிற்று. ஸாரலாவின் அழகு முழுவதும் அவளது நீண்ட கண் இணைகளில் நிறைந்திருந்தது. சிரசில் சிறிது கலைந்திருக்கும் கரிய சுரிகுழலானது பெதும் பையர்க்குரிய விளையாட்டுத் தன்மையையும், கபட மின்மையையுங் காட்டிற்று. இரவு நெடுநேரமான படியால் அவள் இமைமூடி விழி துயின்றுள்.

தாயும் மகளும் வசித்துக்கொண்டிருந்த அக் குடிசை மிகவும் சாதாரணமானதுதான். அதில் ஒரு அறை அடுக்களை; மற்றென்று மாட்டுக் கொட்டில். இவற்றைத் தவிர உட்புரத்தில் இன்னும் வேறிரண்டறைகளும் இருந்தன. அவற் றில் ஒன்று மகாசுவேதாவும் ஸாரலாவும் படுக்கும் அறை. இன்னென்றைப் பகலில் உட்கார்ந்து வேலைசெய்யவும், பார்க்க வருவோருடன் பேசிக் கொண்டிருக்கவும் உபயோகிப்பர். கொட்டிலில்

இரண்டு மூன்று பசுக்கள் நின்றன. முற்றத்தில் ஒரு நெற்களஞ்சியமிருந்தது. புறக்கடையில் மாதுளை, பலா, கொய்யா முதலிய இளமரங்கள் இன் கனிகளைத் தாங்கியிருந்தன. ஸாரலா தன் கையால் நட்டு வளர்த்த பூஞ்செடிகள் காட்சிக்கினிமையை யும் மன உல்லாசத்தையும் தருவனவாயிருந்தன. வீட்டிலுள்ள பொருள்களனைத்தும் விலையுயர்ந் தனவும், அழகுடையனவும், நல்லனவுமாக விருந் தன. ஒவ்வொரு அறையிலும் பாத்திரம் முதலிய பண்டங்கள் ஒழுங்காக வைக்கப்பட்டிருந்தன. வீடு நன்ருகப் பெருக்கி மெழுகித் தூய்மையாக வைக்கப் பட்டிருந்தது. இத்தகைய சிறு குடிலில் வசிக்கும் நங்கையரின் ஒழுக்க நிலையினை அக்கம்பக்கத்தி லுள்ளவர் மிகக் கூர்ந்து கவனித்துவந்தும், ஒரு சிறு குற்றங்குறையும் கண்டிலர். 'மகாசுவேதா ஒரு காயஸ்த ஜமீன்தாரின் மனைவி; தீவினை வலியாற் பெருமையனைத்தையுமிழந்து தன் மக ளுடன் இங்குவந்து வசிக்கின்றனள்' என்னும் வதந்தி மட்டும் ஊருக்குள் பரவியிருந்தது.

---

## அதிகாரம் 2 :—தோழியர் இருவர்

வைகறையில் புள்ளினங்கள் துயிலுணர்ந்து, மரக்கிளைகளில் உட்கார்ந்து, இனிமையாகக் கூவி மாந்தரை யெழுப்புதற்கு முன்பே ஸாரலா தன் படுக்கையை விட்டு எழுந்துவிடுவாள். எழுந்ததும் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு வீட்டின் வாயில், முற்றம், தலைக்கடை, புறக்கடைகளைப் பெருக்கி மெழுகிச் சுத்தப்படுத்துவாள். பின்பு,

பாத்திரம் பண்டங்களைத் துலக்கத் தொடங்கித் தூய்மையுற வைப்பாள். அவள் செய்யும் எந்த வேலையும் திருத்தமாகவே யிருக்கும். அவ்வளவு விரைவில் வீட்டுவேலைகளைச் செய்து முடித்தலிற் குற்றேவல் மகளிரும் இவளுக்குப் பின்னிடுவர்.

வழக்கம்போலவே இன்றும் தன் வேலைகளை முடித்துக்கொண்டு ஸாரலா, இடுப்பில் இடுக்கிய குடத்துடன் ஆற்றங்கரைக்குப் புறப்பட்டவள், வழியிலிருந்த ஒரு மனையின்முன் நின்று "தேவீ! தேவீ!" என்றழைத்தனள். அவ் வில்லம் தாழிட்டிருந்தது; திறக்கப்படவில்லை. மறுபடியு மவள் கதவை மெல்லெனத் தட்டித் "தேவீ! அமலா தேவீ!" என்று இனிய குரலுடன் அழைத்தனள். அதற்குள், "தோழி! வந்தேன், வந்தேன்" என்ற எதிர்மொழி கேட்டது. உடனே கதவுந் திறந்தது. உள்ளே இருந்து இருபது வயதுள்ள எழில் மிகுந்த இளம் பெண்ணொருத்தி வெளியில் வந்தனள்.

"ஏது? இன்றைக்கு நீ சற்று முன்பே விழித்துக்கொண்டனையோ? அல்லது நான் தான் அதிக நேரம் நித்திரையில் ஆழ்ந்தேனோ?" என்று சொல்லிக்கொண்டு ஸாரலாவின் அருகில் வந்தாள் அமலா தேவி.

அம் மங்கையின் கண்கள் அகன்றும் நீண்டுமிருந்தன. அவள் சரிகைக் கரையுள்ள நீலச்சேலை யுடுத்திருந்தனள். கையில் தங்க வளையல்களும், காலில் பாதசாலங்களும் மிளிர்ந்தன. அவளும் இடுப்பிற் குடம் வைத்திருந்தனள்.

ஸாரலா :—தேவீ! உன் வேண்டுகோளின்
படியே இங்கு வந்து உனக்கு வீணாகத் தொந்தரவு
கொடுத்தேன்.

அமலா :—தொந்தரவென்ன? வைகறைத்
துயிலெழுவதில் எவ்வளவோ நன்மைகள் இருக்கின்
றன. நிற்க, நீ என் வேண்டுகோளினால் வந்தாய்;
நான் வேண்டாவிடில்?

ஸாரலா :—ஆம். அப்பொழுதும் வந்துகா
ணிருப்பேன். காலையில் எழுந்ததும் உன் முகந்
தான் என் அகக்கண்ணுக் கெதிரில் நிற்கும்
வராமலா இருப்பேன்?

உடனே அமலா, ஸாரலாவின் வதனத்தை
அன்பு நிறைந்த பார்வையுடன் பார்க்கலானாள்.
ஸாரலாவின் முகம் கள்ளங்கபடற்றுத் தற்பெருமை
யென்பது சிறிதுமின்றி விளங்கிக்கொண்டிருந்தது.
அமலா அவள் கையைப் பற்றிக்கொள்ள, இருவரும்
ஆற்றங்கரை நோக்கி யேகலாயினர். போகும் வழி
யில் அவர்கள் வாயை மூடிக்கொண்டே நடந்தனரா?
இல்லை. உலக சமாசாரங்கள், உள்ளூர்ச் செய்தி
கள், அண்டை அயல் வீட்டு நிகழ்ச்சிகள் இவை
களெல்லாம் சில நிமிட நேரங்களில் அமலாவின்
வாயினின்று வெளிவரும். ஸாரலாவிற்கும்
இவற்றைக் கேட்பது ஒரு நல்ல பொழுதுபோக்காக
இருக்கும். ஆகையால் பின்வருமாறு பேசிக்
கொண்டே சென்றனர்.

அமலா :—ஸாரலா! உனக்கு அந்தச் செய்தி
தெரியுமா?

ஸாரலா:—எந்தச் செய்தி ?

அமலா:—நமது ஜமீன் தார் இருக்கிறாரே, அவர் வீட்டுச் செய்தி.

ஸாரலா:—எனக்கெப்படித் தெரியும்? ஒரு சிறு செய்தியும் நீ சொல்லித்தான் நானறியவேண்டும்.

அமலா:—நமது ஜமீன்தார் தமது அருமை மகன் சுரேந்திர நாதனுக்கு ஒரு பெருஞ் செல்வரின் மகளை மணைட்டியாக்கத் தீர்மானித்தனராம்; அந்தப் பெண் ரூபலாவண்யம் வாய்ந்தவள்; குலம், குடி, செல்வம், உருவம், பருவம் முதலிய எல்லாவற்றிலும் மணமகனுக்கு இயைந்தவளாக விருந்தும் ஜமீன் குமாரன் அவளை மணம்புரிய மறுத்து, இல்லம் விட்டகன்று எங்கோ போய்விட்டனனும்.

ஸாரலா:—ஏன்?

அமலா:—ஏனோ? எனக்கெப்படித் தெரியும்? ஊருக்குள் உலாவும் வதந்தி வேறாயிருக்கிறது.

ஸாரலா:—என்ன?

அமலா:—ஜமீன் புதல்வன் இளமையிலேயே வேறொரு இளமயிலை மணமகளாகக் கொள்ள இசைந்துவிட்டனனும். அப்பெண்மணி ஏதோ ஒரு சிற்றூரிலிருக்கும் ஒரெளிய கன்னிகையாம். தோழீ ஸாரலா! உன்னை யவன் எப்பொழுதேனும், எங்கேனும் பார்த்திருப்பானோ?

ஸாரலா:—உஸ். தேவி! உனக்கு எப்போதும் இதுதான் தொழில். என்னை அசதியாடுவதைத் தவிர உனக்கு வேறு மணியம் இல்லை.

இவ்வாறு வேடிக்கையாகப் பேசிக்கொண்டே அத்தோழிய ரிருவரும் ஆற்றங்கரையை யடைந்தனர். அடைந்ததும் அவர்கள் அங்கொரு விசித்திரமான காட்சியைக் கண்டனர். கரிய நிறமுள்ள உயரமும், பருமனுமான உருவமொன்று கிழிந்த ஆடையுடுத்த கோலத்தோடு நின்று கொண்டிருந்தது. அவ்வுருவைக் கண்டதும் இருவரும் சற்றுத் திகைத்தனர். அமலா தைரியத்துடன் அதனருகிற்சென்று, "யார் நீ?" என்று வினவினள்.

அவ்வுருவம் :— என்னைப் பைத்தியக்காரி விசுவேசுவரி என்பர்.

அமலா :—விச்சிப்பைத்தியம் என்கிறார்களே, அது நீ தானே? முன்னொரு தடவை நீ இவ்வூருக்கு வந்திருக்கிறாயே ?

விசு:—ஆம், வந்திருக்கிறேன்.

அமலா:—கைபார்த்துக் குறிசொல்ல உனக்குத் தெரியுமாமே? எங்கே, என் கையைப் பார்த்துக் குறிசொல், பார்ப்போம்.

விசு:—(சற்றுநேரம் அமலாவின் கையை யுற்றுப் பார்த்துவிட்டு) நீ ஒரு திவானின் மனைவியாகப் போகிறாய்.

அமலா:—(கோபங் கொண்டவள்போற் காட்டி) போ, தூரப் போ, அதிகப் பிரசங்கி! "நீ திவானின் மனைவியாகப் போகிறாய்." அடிபிணமே, எனக்குக் கலியாணமாயிருக்கிறது. ஒருவர்க்குக் கைகட்டிச் சேவிக்கவேண்டிய அவசியம் என் கணவருக்கில்லை.

எனக்கு அந்தத் திவானும் வேண்டாம்; ஜவானும் வேண்டாம். போகட்டும். இதோ, என் தோழி; இவளுக்கு எப்பொழுது கடிமணம் நிகழுமென்று குறி கூறு பார்ப்போம். கணவனில்லாக் கவலையால் நாளுக்கு நாள் நைந்துகொண்டிருக்கிறாள், பாவம்.

ஸாரலாவின் கையை அந்தப் பைத்தியம் தன் கையாற் பற்றி யுற்றுநோக்கினள். இடையிடையே ஸாரலாவின் முகத்தைப் பார்த்தனள். சற்று நேரத்திற்குப் பிறகு, "குழந்தாய்! உன் அதிர்ஷ்டம் எப்படி இருக்கிறதென்று ஒன்றும் விளங்கவில்லை. உன் ஆயுளென்னும் வானில் முகிற்குழாம் பரவுகின்றது. கரு முகில், கொடிய இருள் இவற்றைத் தவிர அங்கு வேறொன்றுமே புலப்படவில்லை. அஞ்சத்தக்க பிரளயமொன்று விரைவில் சம்பவிக்கப்போகிறது. ஆதலால் இக்கணமே இவ்வூரினின்றும் பெயர்ந்து போதல் நலம். நீ இங்கிருந்தும் ஓடிப்போ! ஓடிப்போ! ஓடிப்போ!" என்றனள்.

பைத்தியக்காரி பகர்ந்த இம்மாற்றத்தால் பயந்தனள் ஸாரலா. தன் அன்புடைத் தோழியின் அந்நிலையைக் கண்டதும், அமலா சினந்து அப் பைத்தியக்காரியைப் பார்த்து, "இரு, பேயே! உன் கொழுப்பை அடக்குகிறேன். நான் ஒன்றைக் கேட்க நீ யொன்று சொல்லுகிறாய்?" என்று அப் பைத்தியக்காரியின் மேல் நீரை வாரி யிறைக்க அவளும் ஒவ்வோரடியாய்ப் பின்னுக்கு நகர்ந்து கொண்டே தொலைவிற்போய் நின்றுகொண்டு ஸாரலாவைப் விளித்து மறுபடியும், "ஓடிப்போ! ஓடிப்போ! ஓடிப்போ!" என்று உரத்துக் கூவி விட்டு வந்த வழியே திரும்பினள்.

பிறகு, அப் படித்துறையில் அக் காலைவேளையில் அவ்வூர்ப் பெண்டிர் குழாம் வந்து கூடிற்று. அவர்கள் ஒருவர்பின் ஒருவராக வந்து தமது நல்வரவை அப் படித்துறைக்கு நல்க, அது தன் இயற்கை வனப்பு வாய்ந்த இன் முகத்துடன் அவர்களை வரவேற்பதுபோற் காணப்பட்டது. அவர்களுட் சில பாவையர் பாத்திரங்கள் துலக்கினா; சில தையலர் தந்ததாவனம் செய்தனர்; சில அரிவையர் ஆடை ஒலித்தனர்; சில மடைந்தையர் நீரில் மூழ்கினர்; சில வனிதையர் ஊர் வம்பளக்கலாயினர்; சில தெரிவையர் தம் தோழிகளிடத்தில் ஏதோ சில இரகசியங்களைச் செவியில் ஓதிக்கொண்டிருந்தனர்; பேரிளம் பெண்டிர் சிலர் அயலகத்து நிகழ்ச்சிகளைக் குறைகூறிப் பேசிக்கொண்டிருந்தனர். இத்தகைய பெண்டிர் குழாத்தோடு கலந்துகொண்டு, இச்சாமதி யென்னுங் கன்னிகை தானும் ஏதோ சம்பாஷிப்பதுபோலக் கலகலவென்று ஒலித்தோடினள். அப்பொழுது அமலாவும் ஸாரலாவும் தத்தம் குடங்களில் தண்ணீர் முகந்துகொண்டு தம்மனை திரும்பினர்.

அமலா:—உனது அன்னையாரைப் பார்த்துப் பேசிப் பல நாட்களாயின. இன்று மாலை அவரைக் காண வருகிறேன்.

**ஸாரலா**:—தவறாமல் வருக; எதிர்பார்த்திருப்பேன்.

அமலாவின் வீட்டின் முன்புறத்தில் சுமார் நாற்பது வயதுள்ள ஓர் ஆடவர் நின்றுகொண்டிருந்தனர். அவர்தான் அவளது ஆருயிர்க் கணவர் **நவீனதாஸ்** என்பார். அவர் பெரிய தனவந்தராக

இருந்தும், அவருடைய தோற்றம் மிகவும் சாதாரண மாகவே காணப்பட்டது. முதன் மனைவி யிறந்து வெகு நாட்களுக்குப் பின் தமது முப்பத்திரண்டாம் பிராயத்தில் அமலாவை அவர் மணம் புரிந்து கொண்டார். திருமணம் நடக்கும்போது அமலா விற்கு வயது பன்னிரண்டு. இப்பொழுது இவர்கள் உடலிரண்டும் உயிரொன்றுமாய் வாழ்ந்துவரு கின்றனர். தன் இயற்கைப்படி அவள் தன் கணவரோடும் அசதியாடாதிருப்பதில்லை. யாரை யும் பரிகாசமாகப் பேசி விளையாடுவது அவளது பிறவிக் குணம்.

நதியினின்று வந்ததும், ஸாரலா தன் அன்னையை அடைந்து, " அன்னையே ! இன்று ஆற்றங்கரையில் பைத்தியக்காரி விசுவேசுவரி வந்திருந்தனள். அமலா என்னைப்பற்றிக் குறி கூறக் கேட்டதற்கு, அவள் என்னைப் பார்த்துப் 'பெரிய பிரளயம் வருகிறது; இன்றே இவ்வூரை விட்டு ஓடிப் போ; அபாயம் ! அபாயம் !! 'ஓடு, ஓடு' என்றனள். எனக்கொன்றும் விளங்கவில்லை" என்றுரைத்தனள்.

மகாசுவேதா, "விச்சிப் பைத்தியத்தை எனக் குப் பன்னாளாகத் தெரியும். அவள் கூறுவதில் ஏதோ இரகசியமிருக்கிறது" என்று சொல்லிச் சிந்தனையில் ஆழ்ந்தனள்.

---

## அதிகாரம் 3 :- முன்னும் பின்னும்

அமலா, தனது நட்பினள் ஸாரலாவையும், அவளது அன்னையையும் காணப்போவதாகத் தன் கொழுநரிடங் கூறவே, தாமும் அங்கு வருவதாக அவர் மொழிந்தனர்.

ஸாரலாவையும், மகா சுவேதையையும் பொதுவாக அறிந்தனரேயன்றிச் சிறப்பு வகையில் அவர்களின் வரலாறென்றும் இவர்கள் அறிந்திலர். எப்படியறியமுடியும்? உண்மையொன்றாயிருக்க, உலகினர் கூறுவது வேறு பலவாயிருக்குமன்றோ?

இவர்களின் வரவைக் கண்ணுற்ற மகா சுவேதா வரவேற்று, முகமன் கூறி, அவ்விருவருக்கும் தனித்தனி மணையிந்து அதில் அமர வேண்டினள். தாஸர் தம்மெதிரே நின்றுகொண்டிருந்த மகாசுவேதையை அமரும்படி வேண்ட, அவளும் கீழே அமர்ந்தனள். திடீரென்று அத் தம்பதிகள் தன் இல்லிற்கு வந்ததெதன் பொருட்டெனை அவளுக்கு ஒன்றுந் தோன்றவில்லை. ஓரைந்து நிமிடம் அனைவரும் மௌனமாக இருந்தனர். அப்பொழுது அமலா, "நாங்கள் ஸாரலாவை மணம்பேச வந்திருக்கின்றோம்" என்று கூறிச் சிரித்தனள். அவள் கணவர், "என்ன அமலு! உனக்குக் காலம், இடமென்பதொன்றுமே யில்லையா? எங்கும் விளையாட்டுத்தானா?" என்று சொல்லித் தன்னெதிரில் அமர்ந்திருக்கும் மகா சுவேதாவின் முகத்தை நோக்கினர். அந் நோக்கம் தாம் ஏதோ சொல்லப்போவதாகவும்,

அதற்கு அவள் செவிசாய்க்க வேண்டுமெனவும் குறிப்பதாயிருந்தது.

சற்று நேரம் பொறுத்து, "தேவி! நமது ஸாரலா இவளுக்கு ஆருயிர்ப் பாங்கி. ஏன்? உடன் பிறந்த தங்கையேதான். ஆகையால் நாம் நெருங்கிய சுற்றத்தாரல்லவோ? அதனால் உங்கள்வரலாறு எது வெனச் சிறப்பு வகையால் அறிந்து கொள்ளவே நாங்கள் இங்கு வந்தது. இது விஷயமாகத் தெரிந்துகொள்ள உங்கள் மூத்த மகளுக்கு என்னி னும் ஆவல் அதிகம். தங்களுக்கு விருப்பமிருப்பின், அதனால் யாதொரு தீங்கும் நேராதெனின், தங்கள் வரலாற்றை ஆதியோடந்தமாகக் கேட்க விருப்ப முடையோம்" எனத் தம் வார்த்தையை முடித்தனர்.

சுவேதை சற்று வாளாவிருந்து, பின்பு கொஞ்சங்கொஞ்சமாய்த் தனது வரலாற்றைத் தெரிவிக்கத் தொடங்கி, "ஐயா! என் வரலாறு இன்னுங் கொஞ்சநாள்வரை வெளிப்படாமலிருக்க வேண்டும். இது வெளிப்படின் எங்கள் உயிருக்கே இறுதி நேரும். இவ்விஷயத்தைத் தாங்களும் தேவியும் மனத்தகத்தேயே தாழிட்டுப் பொதிந்து வைத்தல் வேண்டும்" என்று கூறினள்.

தாஸர்:—இல்லை, இல்லை, உங்கட்கு ஒரு தீங்கு நேர்வதேல் அது எங்கட்குந்தான். நீங்கள் சொல் லும் இரகசியத்தை நான் யாருக்கும், எவ்வகை யினும் வெளியிடேன். அமலாவும் அப்படியே செய்யக் கடமைப்பட்டவள்.

சுவேதை:—ஐயா! எனது பதி சமரசிம்ம ராய் என்பவர்; காயஸ்த ஜமீன்தார்களென்னும் அணி கலனில் நாயகமணியாய் விளங்கியவர். பட்டாணிய

தாவூத்கானுடன் மொகலாயர் தொடங்கிய போரில், சக்ரவர்த்தியாகிய அக்பர் பாட்னு நகரத்தை முற்றுகையிட்டுக் கங்கை நதியின் அக்கரையி லுள்ள காஜிபூர் நகரைக் கைப்பற்றுவான் அமல் கானை அனுப்பிய காலத்தில், சமரசிம்மரானவர் ஆயிரம் இவுளி மறவர்க் கதிபராய்ச் சென்று, வெற்றியை யீட்டினர்.

பாட்னுவைக் கைப்பற்றிய பிறகு அக்பர் கூட்டிய பெரியதோர் அவைக்களத்தில் கூடியிருந்த எல்லா இந்திய ஜமீன்தார்களும் தாராகணங்க ளாக, எனது ஆருயிர்த் தலைவர் ஓர் ஆதவனாக வீற்றிருந்தார்.

இராஜா தோடர்மால் காலாட் படைஞருடன் தாவூத்கானைத் துரத்திச் சென்ற அமயத்தில் அவ ருடன் சென்றுழைத்தவர் சமரசிம்ம ராயே. எங்குப் பார்க்கிலும் அதிக்கிரமம் புரிந்துகொண் டிருந்த கூட்டக் கொள்ளைக்காரர்களையும், இராஜத் துரோகிகளையும் அடக்கி, வங்கதேச முழுவதையும் அமைதியுறச் செய்வதன் பொருட்டு முதற்கண் வாடாவஞ்சி யணிந்தவர் எனது ஆருயிர்த் தலைவரே. தாண்டாவிலிருந்து வீரபூமி, வீரபூமியி யிலிருந்து மேதினிபுரம், அங்கிருந்து கடக் ஆக, இராஜா தோடர்மால் எங்கெங்குச் சென்றனரோ, அங்கெல்லாம் அவரது நிழலெனச் சென்று, அற்றங் காக்குங் கைபோல் உதவி முன்னின்றவர் எனது கணவரே. அந்த யுத்தத்தில் தோடர்மால் சூடிய வாகைமாலையின் ஒவ்வொரு மலரும் சமர சிம்மர் தொடுத்தவைகளே. அவ்வாறு செய்த உதவிக்கு இத்தகைய கைம்மாறுதான் கிடைக்க வேண்டுமோ?........

"க்ஷத்திரிய குல சூடாமணியாகிய இராஜா தோடர்மாலும், காயஸ்த குல சிகாமணியாகிய இராஜா சமரசிம்மருங் காட்டிய போர்த் திறன் சக்கரவர்த்தி அகபர் பாதுஷாவிற்கு எட்டியதும், தர்பாரில் வெற்றி முரசு திசையனைத்தும் செவிடுபட பேரிடி முழக்கமென்ன முழங்கிற்று. அதுமுதல் இராஜா சமரசிம்மருடைய புகழ் வங்க தேச முழுவதிலும் பரவலுற்றது.

"இந்தப் பெரும் புகழ் பரவிவந்து என் காதிற் புகுந்ததும் அந்நாளில் சதுர்வேஷ்டித துர்க்கத்தின் ஓரமையில் உட்கார்ந்திருந்த எனக்குண்டான மகிழ்ச்சிக்கோர் கங்குகரையில்லை" என்று சொல்லும் பொழுதே அவள் விழிகளினின்றும் மளமளவென்று கண்ணீர் வெள்ளம் பெருகி வழிந்தது.

சற்றுத் தயங்கி நின்று, பின்பு தேறி, 'அடடா! அன்று பாதுஷாவின் வெற்றிக் கொடியை நிலைநாட்டற்கு அடிகோலிய அந்தச் சமரசிம்மர் இன்று இராஜத்துரோக மென்னுங் குற்றஞ் சாட்டப்பட்டுச் சிரசாக்கினைக்குள்ளாவதா? தேவாதி தேவா! இவ்வநீதிக்கு ஒரு விசாரணையும் நடக்கப் போவதில்லையா?" என்று மொழிந்து சோர்ந்தனள் மகாசுவேதை.

சோர்வு நீங்கி அவள் மறுபடியும் தன்னிலை அடைவதற்குப் பல நிமிடங்கள் சென்றன.

தாஸி :—தாங்கள் சொல்லிவந்தவற்றில் பிற்பகுதியொன்றும் விளங்கவில்லையே.

**சுவேதை:**—ஐய! ஸதீசசந்திரன் என்றோர் அதி பாதகன் உளன். அவன் பட்டாணியரென்னுந் தேருக்கு அச்சாணி போன்றவன். பட்டாணியரது தலையெடுப்பு அடங்கவே இவனும் அவர்களை விட்டு மொகலாயர் பக்கஞ் சேரலானன். முதன் முதல் எனது ஆருயிர்த் தலைவர்தான் இராஜா தோடர் மாலிடம் அவனை அறிமுகப்படுத்தினவர்; அவனுக்கு வேலை கிடைக்கும்படி சிபார்சுசெய்தவரும் அவரே. இன்னும் எத்தனையோ நன்றிகளையும் அப்பாதகன் இவர்பாற் பெற்றிருக்கிறன். உத்தியோகஸ்தரிடம் அரசாங்கக் கட்டளைகளை அவ்வப்போது சேர்ப்பிப்பது இவனது வேலை. இவன் தனது திறமையினுல் வேறு பல சூழ்ச்சிகளும் செய்துவந்தான். தனக் கநுகூலமாக எதிரிகளுடன் பேசி உடன்படிக்கை செய்துகொள்வது, தருணம் வாய்த்தபோது பகைஞர் படையிற் கலகமுண்டாக்குவது முதலிய தொழில்களில் அவன் அதிக சமர்த்தனயிருந்தான். எக்காரணத்தாலோ இராஜா தோடர் மாலுக்கு ஸதீசனிடத்தில் மிக்க அன்பு ஏற்பட்டிருந்தது. அதனுல் அவனுக்கு மேன்மை, புகழ், செல்வாக்கு முதலியன பெருகின. இந்த உயர்தர நிலையை அடைந்ததும், ஸதீசன் மனத்தில் இன்னும் பலமான பேராசை யெழத் தொடங்கிற்று. வங்க தேசத்திலுள்ள எல்லா இந்துக்களுள்ளும் தான் முதல்வனுகவேண்டுமென்னும் பேரவா அவனுள்ளத்துதித்து வளர்வதாயிற்று. அதனுல் அவன் என் பதியினிடம் பொறுமையும், உட்பகையும் உடையவனுயிருந்தான்.

"இராஜா தோடர்மால் வங்க தேசத்தினின்றும் திரும்பியதும், ஸதீசனுக்குச் சமயம் வாய்த்தது. அவன் சில போலிக் கடிதங்களைச் சித்தஞ் செய்தான். அவற்ருல், 'பட்டாணிய அரசனுகிய தாவுத்கான் என்பவனுடன் சேர்ந்துகொண்டு சமரசிம்மர் சர்க்காருக்கு விரோதமாகச் சூழ்ச்சி புரிந்துவருகிருர்' என்று ஒரு கயிறு திரித்துவிட்டான். அதை மாகாணத் தலைவருக்கு வெகு இரகசியமாகத் தெரிவித்தான். வங்காளத்து மகமதிய சுபேதார் அதை உண்மையென்று நம்பினமையால் உடனே சமரசிம்மரை இராஜத்துரோகி என்னுங் குற்றவாளியாக்கித் தூக்கிலிட்டு கொல்வித்தான். சர்க்காருக்கு நன்மை செய்தான் என்ற காரணத்தால், அந்த நன்றிகெட்ட ஸதீசனுக்கு எங்களுடைய விஸ்தீரணமான ஜமீன் பரிசாக வழங்கப்பட்டது. அப்பாதகன் இன்று வங்கநாடு முழுமைக்கும் திவாஞக நியமனம் பெற்றிருக்கிருன்."

மகாசுவேதா இவ்வாறு கூறும்போது அவளது சோகம் மாறி, வீரமும் கோபமுமே பொங்கித் ததும்பிக் கிளம்புவனவாயின. சற்று நேரம் பொறுத்துத் தன் கோபத்தை யடக்கிக்கொண்டு அவள் "ஐய! நான் தெரிவிக்கவேண்டியவற்றில் இன்னும் ஒரு பகுதிதான் மிகுதியுள்ளது; எனது ஆருயிர்க் காதலரை அநியாயமாகச் சதித்த இந்தப் பழிக்குப் பழி வாங்கும் நோக்கத்துடன் நான் ஓர் அருந்தவ முதியோர்பால் அறிந்த கடிய நோன்பு ஒன்றை நோற்றுவருகிறேன். நாடோறும் நள்ளிரவில் நீராடி முழுமுதற் கடவுளாகிய மகாதேவனை

ஆராதித்துவருகிறேன். இந்த நோன்பு என் உயிரின் ஒருபகுதியாகவும், வாழ்க்கையின் பற்றுக் கோடாகவும் இருக்கிறது. ஆற்ருெணுத் துன்பை யும் கலக்கத்தையும் பொறுத்துக்கொண்டு நான் இதுவரை உயிர்தாங்கியிருப்பது இந்த நோன்பின் பயனைக் கருதியே. எந்த நாளில் இவ்விரதம் முடிவுபெறுமோ, அதேநாளிலே இப்பாவியின் ஆவியும் உடலினின்றும் பிரியும். எத்துணை நாள் வரை அந்தத் தேவநாயகன் என் பகைஞரை யொழிப்பதில்லையோ, அத்துணை நாள் என் அரும் பெறற் புதல்வியுந் திருமணமின்றியே யிருப்பள். ஏழு வருடம் வரை நான் இவ்வாருகவே இந் நோன்பை நோற்பேன். அதற்குள் என் பகைஞர் ஒழிவரென்னும் உறுதியுடையேன். இன்றேல், அவ்விறைவன் முன்னிலையில் என் கண்மணி யனைய காரிகைக்கு வதையும், எனக்குச் சிதை யுமே கதியாகும். எவன் இந்த அகன்ற உலகனைத் தையும் படைத்தனனே, எவனுடைய ஆணையால் வளி உளர்வதும், ஞாயிறு திங்கள் இயங்குவதும் நிகழ்கின்றனவோ, எவனுடைய உதவியின்றி ஓர் அணுவும் அசைவதில்லையோ, அந்த ஒப்பருந் தெய் வத்தின் திருவடி வழிபாட்டைத் தவிர வேறெவ் விதச் சூழ்ச்சியையும் யான் கருதிலேன். இவ்வரிய நோன்பு நோற்பவள் அநியாயமாகக் கொலையுண்ட சமரசிம்மரின் மனைவி; கேவலம் ஓர் அபலையல்லள்.

“ஐய! ஓர் எளிய பறவைக் குஞ்சு, வேடன் அம்புபடில் கீச்சென்று கூவி உயிர்விடும். ஒரு பாம்போ யாருடைய காலிலாவது மிதிப்பட்டால் முதலில் மிதித்தவனைக் கடித்துக் கொன்று, பிறகே

அந்த மகிழ்ச்சியால் தன்னுயிரை விடுகிறது. இவ்வளவே நான் கூறுவன்'' என்று நவின்று மகா சுவேதை நெட்டுயிர்ப்புற்றனள்.

இவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த நவீன தாஸரும் மிகு துயருற்றனர். சுவேதை தன் பழைய வரலாற்றைத் தாஸருக்குச் சொல்லத் தொடங்குகையில், ஸாரலாவும் அமலாவும் விளையாட்டில் விருப்பமுடையவர்களாய்ப் புறக்கடையில் பூஞ்செடி கொடிகளில் மலர் பறித்து ஒருவர்க்கொருவர் உவந்து அலர் சூட்டி உல்லாசமாக உரையாடிக்கொண்டிருந்தனர்.

"இறைவன் இன்னருள் புரிக. அடுத்து மறுமுறை வருவேன்'' என்று விடைபெற்றுக்கொண்டு நவீன தாஸர் இல்லக்கிழத்தியுடன் தமதகத்தை அடைந்தனர்.

---

## அதிகாரம் 4: நண்பர் சந்தித்தல்

'கவலை யென்றா லென்ன? துன்பமென்பது எத்தகையது?' என்று இதுவரையில் அந்த இளஞ் சிறுமிக்கு ஒன்றுமே தெரியாது. அவ்வாறிருந்தும் அவளுடைய உள்ளமென்னும் வானில் சிறு சிறு முகிற்படலம் பரவுவதுபோலிருந்தது. எதிர்காலத்தைப்பற்றி அவளுக்கு யாதொரு கவலையும் பயமுமில்லை. வேறு மனக்கவலையும் அவளகத்திற்குள்

புக வழியில்லை. அவ்வாறிருந்தும் அவளுடைய தூய உள்ளம் இன்று ஏதோ களங்கமுற்றதாகத் தோன்றிற்று. அவள் நெற்றியில் வியர்வை நீர் பொடித்தது. அவ்வமயத்தில் ஒருருக்கமான பாடலைத் தன் இனிய குரலுடன் பின்னும் பின்னும் அவள் பாடிக்கொண்டிருந்தனள்.

"உற்றாரை யான் வேண்டேன்; ஊர் வேண்டேன், பேர் வேண்டேன்;
கற்றாரை யான் வேண்டேன்; கற்பனவும் இனி யமையும்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தா! உன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே"

என்னும் பாடலின் கருத்தையுடையது அது.

இதற்குள் பின்பக்கத்திலிருந்து யாரோ 'ஸாரலா' வென்றழைத்தனர். இவ்வாறு அழைத்தது ஓரிளைஞனின் குரல். இந்த இளைஞனுக்குச் சற்றேறக் குறைய இருபது வயதிருக்கும். அவனது உடல் நேர்மையாயும், மேனி யொளியுடையதாயும் விளங்கின. முக விலாசம் மிகவும் பொலிவு வாய்ந்தது. விழிகள் அவனது உதார குணத்தை வெளிபடுப்பன. இத்தகைய இளங்குமரனின் வதனம இன்று ஏதோ காரணத்தாற் சற்று வாடிக் காணப்பட்டது.

தன் பெயரைச் செவியுற்ற ஸாரலா, திடுக்கிட்டுத் திரும்பிப்பார்த்து, 'யார்? நீங்களா? வாருங்கள்' என்றாள்.

வாலிபன் :—ஸாரலா! உனக்கு இல்லறத்தில் இவ்வளவு வெறுப்பா? அவ்வொரு பாடலையே பன் முறையும் பாடினையே.

ஸாரலா :—"அப்படியொன்றுமில்லை. நான் அறிந்த பல பாடல்களினும் இஃது ஒன்றினையே தனிமையாயிருக்கும்பொழுதெல்லாம் பாடி இறைவனை நினைப்பது வழக்கம். அதனால் பாடினேன். நீங்கள் இப்படி ஒளிந்து கேட்பீர்களென்று எனக்கெப்படித் தெரியும்?" என்று நாணினாள்.

நெடுநாட்களுக்குப் பின் இன்று தன் நண்பனை அரிதிற்காண நேர்ந்தமையின், ஸாரலாவின் வாடியவதனம் இரவியைக் கண்ட அரவிந்தமென்ன உடனே மலர, அவள் தங்கள் வீட்டுக் கொல்லையின் கண்ணுள்ள அச்சிறு பூந்தோட்டத்திற்கு அவனை யழைத்துச் சென்று, அங்குத் தன் கையால நட்ட பூஞ்செடிகளைக் காட்டினள். அவனும் மிக அன்புடனும் ஆர்வமுடனும் அவற்றைக் கண்டும், அவள் மொழியைக் கேட்டும் களிப்புற்றான்.

அன்று பௌர்ணமி; முழுமதி யுதிக்கும் தருணம். முதலில் வானம் பொன்மையாகத் தோன்றிற்று. பிறகு படிப்படியாய் முழுமதியின் தண்ணென் கதிர்கள் விசும்பினின்றும் வெளிப்போந்து, செறிந்த மரங்களின் இலைகளினூடே தவழ்ந்து பரவலுற்றன. அந்த மாசற்ற நிலவில் ஸாரலாவின் முகம் மனத்தைக் கவரும் அழகு வாய்ந்திருந்தது. புன்முறுவலோடு அவளது மென்

சொல் மாலைகள் அமிழ்தம் போலினித்தன. அவ் வமிழ்தைப் பருகிக் கொண்டிருந்தவன் சிறிது நேரத்திற்குப் பின் உறங்கி விழித்தவனைப்போல் திடுக்கிட்டு விழித்துத் தீன சுரத்துடன் "ஸாரலா" என்றனன்.

இந்திரநாதனுடைய அவ்வெளிய குரல் செவி யுற்றதும், அவள் வியப்புற்று அவனது முகத்தை நோக்கினள். அது முன்னிலும் மிக ஒளி துன்றி யிருந்தது. இந்திரநாதன், "ஸாரலா, இதுதான் நமது கடைசிச் சந்திப்பெனத் தோன்றுகிறது" என்றனன். அவள் தனது விழிகளில் நீர் ததும்ப, "ஏன்? இனி நீங்கள் உருத்திரபுரத்தில் இருக்கப் போவதில்லையா?" என்றனள்.

இந்தி:—இப்பொழுது எனக்கு இங்கிருக்க முடியாது. அது ஏனென்பது பிறகு உனக்குத் தெரியவரும்.

ஸாரலா:—உண்மையாகவே நீங்கள் வெளிக் கிளம்பப் போகிறீர்களா?

இந்தி:—ஆம். நான் போவதனால் உனக் கென்ன துன்பம்?

ஸாரலா:—எனக்கு வேறு யாரிருக்கின்றனர்?

இந்தி:—ஸாரலா! உன்னுடைய இத்துன்புரை யால் எனதுள்ளம் உடைந்துபோகிறது. செய்வ தறிகிலேன். இனி அரைகணமும் இவ்வூரில் தங்க என்னால் முடியாது. விடை கொடு. நான் மேற்கொண்ட காரியம் பெரிது; அது நிறைவேறி உயிருடன் மீள்வேனேல் உன்னை மீண்டும் காணப்

பெறுவேன். இன்றேல், இதுதான் கடைசியாகக் காண்பதென்று நினைத்துக்கொள்.

இந்திரநாதனின் மொழிகள் யாவும் தன் காதிற்கெட்டியு மெட்டாமலும் இருக்குமுன், ஸாரலாவின் கருங்குவளைக் கண்கள் ஆறாக நீர் பெருக்கிச் செங்குவளையாயின. இந்திரநாதன்மீது தான் கொண்ட சகோதர வாஞ்சையைத் தவிர மேலான ஒரு புதிய பிரேமை தனதுள்ளத்திற் குடிபுகுந்திருப்பதைக் களங்கமற்ற அவ்விளஞ் சிறுமி இதுவரை யறிந்திலள். அவனது பிரிவால் தனக்கிவ்வளவு துன்பமுண்டாகுமென்று அவள் கனவிலுங் கருதிற்றிலள். பின்பு இந்திரநாதன் அவளுக்கு நம்பிக்கையளித்து, "ஸாரலா! நான் அரவழியை ஒப்புதற் பொருட்டு வெளியேறக் கடவேன்; இறைவன் எனக்குத் துணை நிற்பன். மேற்கொண்ட வினை முற்றி, மீண்டும் வந்துன்னைச் சந்திப்பேன்" என்றான்.

ஸாரலா:—ஆனல், என்று வருவீர்கள்?

இந்தி:—ஆறு மாதத்தில் திரும்பி வருவேன். இன்று பௌர்ணிமை; இந்த ஏழாவது உவாவன்று நான் உன்னை வந்து காண்கிற்பேன். வாராவிடில் இந்திரநாதன் இவ்வுலகிலில்லையென நினைத்துக்கொள்.

இதற்குள் வாயிற் கதவு தட்டப்பட்டது. ஸாரலா கதவைத் திறக்கச் சென்றனள். அவள் போகும்போது இமை கொட்டாமல் அவளையே உற்று நோக்கிக்கொண்டிருந்த அவன், "எல்லாம்

வல்ல இறைவ! இவ்வனிதா மணியை எனக்கருள் வாயாக" என்று தனக்குள் சொல்லிக்கொண்டு இறைவனை இறைஞ்சினன்.

---

## அதிகாரம் 5: இடம் பெயர்தல்

இராஜா சமரசிம்ம ராய் தமது வாழ்நாளில் வங்க தேச ஜமீன்தார்களுக்கு உற்றுழி யுதவுஞ் சகோதரரும், நன்மதி நண்பருமா யிருந்தார். அவர் தமது வீரத்தாலும் புயவலியாலும் பெற்ற பெருஞ் செல்வ மனைத்தையும் தமது உறவினர்பொருட்டே யுதவினர். நகேந்திரநாத் என்பவர் இச்சா புர ஜமீன்தார். அவர்பால் சமரசிம்மருக்கு மிகுந்த நட்பிருந்தது. நகேந்திரநாதனும் சமரசிம்மரைத் தமையனைப்போற் பாவித்துவந்தான்.

இராஜா சமரசிம்மரின் வதைக்குப் பின், அவர் இன்னுயிர்த் துணைவி மகாசுவேதாவும், காதற் சிறுமி ஸாரலாவும் எங்குளரென நகேந்திரன் தேடினன். அவர்கள் என்னவாயினரென ஒன்றுந்தெரிந்திலது. பின் அவர்கள்பால் தான் காட்டும் ஆதரவு வெளிப்படின், திவான் ஸதீச சந்திரனுக்குத் தன் மீது பகைமை யுண்டாகுமென்ற அச்சத்தால் நகேந்திரன் அவர்களை முற்றிலும் மறந்துவிட்டான்.

நட்பென்னும் நூலிழையானது மிக மெல்லியதும் நிலையற்றதுமாக விருக்கிறது. சுயநல நாட்டமென்னுங் கயிறே இதற்கெதிராய்ப் பருத்து வலியுறுகிறது.

நகேந்திரன் நாளுக்கு நாள் தனது செல்வம், கௌரவம் இவைகளை விருத்திசெய்வதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்தான். எவ்வாறு செய்யின் தனது சம்பத்து, சன்மானம், புகழ் இவைகள் விருத்தியடையும், எவ்வாறு நடந்துகொள்வதினல் வங்கதேசத்துச் சர்வதிகாரி திவான் ஸதீச சந்திரனுடைய விசுவாசத்திற்குப் பாத்திரமாகலாம் என்னும் முயற்சியிலேயே அவனுக்கு அல்லும் பகலுங் கழிந்தது. இராஜா சமரசிம்மருடைய மனைவியாகிய அநாதை விதவை யொருத்தியும், அம்மையாகிய மகளொருத்தியும் இவ்வுலகி லிருக்கின்றன ரென்பதுகூட நாளுக்கு நாள் அவனது நினைவிலிருந்து முற்றிலும் மறைந்துவிட்டது.

இச்சாபுரத்தின் ஜமீன்தார் நகேந்திரநாதனுடைய தன்மை இவ்வாறிருக்க, அவனது அருந்தவப் புதல்வன் சுரேந்திரநாதன் எத்தன்மையனென்பதைச் சற்றுக் கவனிப்போம். அவன் தனக்கென வாழாது பிறர் நலம் பேணுபவன். செல்வச் செருக்குச் சிறிதளவும் அவனிடத்தில்லை. ஏழைக் குடிகளிடத்தில் வேறுபாடின்றிக் கலந்து பழகுவான். ஒவ்வொரு நாளிலும் ஏழை எளியவர்க்கு உதவிபுரிவதிலேயே பெரும்பாலும் அவனது காலங் கழியும். மாறுவேடம் பூண்டு ஊரூராய்த் திரிந்து, இன்னலுடையவர்களுக்கு அவருற்ற இடுக்கண்களைப் போக்குவான். பிறரோடு பேசும்பொழுது, அப்பேச்சு மூலமாகப் பல நீதிகளை எடுத்துப் புகட்டி உபதேசிப்பான். "ஏழை மக்கள், வழி வழியாக

வறுமை வாய்ப்பட்டும் எப்பொழுதும் திருப்தியா யிருப்பர்; அஞ்ஞானிகளாயிருந்தும் பாவத்திற்கு அஞ்சுவர்; வாழ்விலும் தாழ்விலும் நிலைகுலையாத உறுதியும் பொறுமையும் உடையவராயிருப்பர். இதுபோன்ற நற்குணங்கள் செல்வரிடத்தில் மருந்துக்கேனும் காணக் கிடைக்குமா?" என்றெண்ணியே சுரேந்திரநாதன் ஏழைக் குடி மக்களோடு விசுவாசங் கொண்டதும், பெருஞ் செல்வர்களைத் துரும்பாக மதித்ததும்.

சதுர்வேஷ்டித தர்க்கத்தினின்றும் தனது இளம் புதல்வியுடன் மகாதேவதா வெளிச் சென்ற செய்தி சுரேந்திரநாதனுக்கு எட்டிற்று. உடனே அவன் தனது பதவி, யோக்கியதை, சுற்றம் அனைத்தையுந் தியாகஞ்செய்து வெளிக்கிளம்பினான். நாடு, நகரங்கள், காடு, மலைகள், ஊர், சேரிகள், தோப்புத்துரவுகள் இவ்விடங்களிலெல்லாம் அவர்களைத் தேடி அலைந்தான். கடைசியில் இச்சாமதியாற்றங்கரையில், மகேசுவர மந்திரமென்னும் ஆலயத்தில் மகந்து சந்திரசேகருடைய ஆதரவில் அவர்களிருப்பதை அறிந்தான். அங்கு வந்து மகாதேவதாவைச் சந்தித்துத் தன் மாளிகைக்கு வந்து வசிக்கும்படி அவன் பன்முறை வேண்டினான். அந்த மாலினி ஒரு சிறிதும் அதற்கொருப்பட்டிலள். அவன் மீளவும், "உங்கள் தலைவர்பால் நாங்கள் பெற்ற நன்றியின் பொருட்டு எனது கைமாற்றைக் காட்டுதற்கு இதுவே தக்க தருணம். எங்கள் மாளிகைக்குவர விருப்பமில்லையேல், நான்

செய்வதொரு பிறகடமையையேனும் பணியின் !" என்று மன்றாடினன். அவனுடைய மன்றாட்டத்தினல் சுவேதையின் வலியஉள்ளம் சற்றே இளகிற்று. பிறகு அவள், "முடியுமேல் உங்கள் ஆட்சியின் எல்லைக்குள் வசிக்க யாதேனுமொர் இடங்கொடுங்கள். அதற்குள்ள வரியை நான் செலுத்தி வருவேன்" என்றனள். அவ் வேண்டுகோளின்படியே சுரேந்திரநாதனும் இச்சாமதி யாற்றங்கரையிலுள்ள உருத்திரபுரத்தில் ஒரு சிறிய வீடு அமர்த்திக் கொடுத்ததோடு, மகாசுவேதா நாடோறும் தனது விரதோன்மை நோற்றற்குப் பிற வசதிகளையும் அமைப்பித்தனன்.

இவ்விருவரையும் தேடப்புறப்பட்ட காலத்தில் மாறுவேடங் கொண்ட சுரேந்திரநாதன் தன் பெயரையும் 'இந்திரநாதன்' என மாற்றிக்கொண்டனன். அந்நாட்களில் தான் அந்த மகேசுவர மந்திரத்தின்கண் அவன் ஸரலாவோடு பழகத் தொடங்கினன். இச்சாமதி யாற்றங்கரையின பச்சென்ற புற்றரையின் மீதும், இளமரககாவினிடையிலும் அவன் எத்தனை தரம் ஸரலாவுடன் விளையாடிக்கொண்டிருந்தான்; எத்தனை தரம் அவளுக்கு விநோதக் கதைகள் சொல்லியிருக்கிறன். இந்நிலையில் ஆறு வருடம் வரையில் அவ்விருவருள்ளத்தும் சகோதரப்பான்மை வளர்ந்து வந்தது. அதைத் தவிர வேறொரு மேன்மையான அன்பும் கருத்தும் தம உள்ளத்தில் முளைத்திருந்தும், அந்தப் பௌர்ணமி இரவிற் சந்திப்பதற்கு முன், அவ்விருவருள் ஒருவரும் அதனை உணர்ந்திலர்.

அன்றிரவில் நோன்பை முடித்துக்கொண்டு சுவேதை தனதில்லந் திரும்பினள். அவள் இந்திரநாதனைப் பார்த்து, "ஐய! விச்சிப் பைத்தியம் இன்று காலையிற் கூறிய அபாயக் குறிகளை ஸாரலா தெரிவித்தனளா? விசுவேசுவரி ஒரு பைத்தியக்காரியோ அல்லது வேறொரு தேவதையோ ஐயமுற வேண்டியிருக்கிறது. அவள் சொல்லியது ஒருபோதும் பொய்த்ததில்லை. எனக்கு முழு அனுபவம் உண்டு. எனதாருயிர்க் கணவர் வதைபடுவதற்குமுன் அவள் ஒரு சோதிடங் கூறினள். அது அங்கை நெல்லியெனப் பலித்தது. பின்னும் இரண்டொரு தடவைகளிலும் அவள் கூறிய சோதிடம் வீணாகவில்லை" என்று பதைபதைப்புடன் விளம்பினள்.

இந்தி:—அப்படியாகில் இன்றைக்கே வேற்றிடமேகல்வேண்டும். எங்குப் போதல் நலம்?

சுவேதை:—மகேசுவர மந்திரத்தில், மகந்து சந்திரசேகர் சார்பில் மீளவுந் தங்குவதே நலம்.

இந்திரநாதன், "ஆயின், இக்கணமே புறப்படுங்கள். நான் பயணத்துக்குரியவற்றைத் திட்டஞ் செய்வேன்" என்று கூறி வெளிக்கிளம்பினன்.

பிறகு சுவேதை தன் அருட்பெறற் புதல்வியை நோக்கிக் "குழந்தாய்! ஒருவருக்குந் தெரியாமல் நாம் இவ்விரவில் வேற்றிடஞ் செல்வது நலம். ஆதலால் நீ புறப்படச் சித்தமாயிரு" என்றனள்.

வாசயோக்கியமான அந்தக் குடிசை, அழகிய புறக்கடை, தன் கையால் நட்ட அப் பூஞ்செடிகள்,

தீங்கனி மரங்கள் இவற்றையெல்லாம் விட்டுப்பிரிதல் எளிதில் இயலுமா? இவ்வனைத்தையும்விடத் தன் னுயிர்க்குயிராயிருக்கும் அமலையின் கூட்டுறவினின் றும் பிரிதல், அந்த இளஞ் சிறுமிக்கு எத்தகைய தோர் பெருந்துயரை விளைக்கும்? செய்வதிதுவென அவளுக்கொன்றுமே தோன்றவில்லை. பிறகு தன் அன்னையிடம் வந்து, "அமலாவினிடம் சொல்லிக் கொள்ளவெண்டாமோ?" என்றனள்.

"போகும் வழியில் விடைபெற்றுப் போவோம்; புறப்படு" என்று சொல்லி, அங்குப் பெருந்தூக்கத்திலாழ்ந்திருந்த வேலைக்காரியை யெழுப்பி, "நாங்கள் திருப்பி வரும்வரை வீட்டைப் பத்திரமாய்ப் பார்த்துக்கொள்; இதோ திறவு கோல்" என்று சொல்லிவிட்டு, அமலையின் அகத் தினை ஸாரலாவுடன் வந்தடைந்தனள் சுவேதை.

அன்றிரவில் வெகு நேரத்திற்குப்பின் வந்த விருந்தினர் சிலரை யுபசரிக்கும் வேலையிலிருந்தன ளாதலின், அமலை இன்னும் படுக்கைக்குப் போக வில்லை. இந்நள்ளிரவில் தன் தோழியும் சுவேதை யும் வீட்டு வாயிலில் நிற்பதை யறிந்த அமலைக்கு ஒன்றுமே தோன்ரவில்லை. கடைசியாகச் சுவேதை அவள் செவியில் சில மந்தணமொழிகளை யுரைக்க, அவள் பதில்சொல்லத் தெரியாதவளாய்த் தன் தோழியை இருகையாலும் வாரி முத்தமிட்டு இறுகத் தழுவிக்கொண்டனள். நெடுநேரத்திற்குப் பின் சுவேதையின் வற்புறுத்தலின்பேரில் ஸாரஸா விடை பெற்றனள்.

ஆற்றோரத்தில் இந்திரநாதன் ஒரு படகை ஆயத்தஞ் செய்துவைத்திருந்தான். அப்பெண் மணிகளிருவரும் இந்திரநாதனும் அதிலுட்கார, இச்சாமதி நதியின் சாந்தமான பிரவாகத்தின் மேல் மெல்ல மெல்ல அப்படகு நகரலாயிற்று. ஆற்றின் மாசற்ற தெளிந்த நீரில் படிந்து அசைந்துகொண்டிருக்கும் நிலாக் கதிர்களின் நீர் விளையாட்டு உளங்கவர் தன்மைத்தாயிருந்தது. இவ்விநோதத்தில் ஈடுபட்டு இச்சாமதி நதியும் சிறிய அலைகளை எழுப்பியோடிக்கொண்டிருந்தது.

வைகறையில் படகு அக்கரையிலிருக்கும் ஒரு சிறிய ஊர்க்கருகில் வந்து நின்றது. பிரசித்தி பெற்ற மகேசுவர மந்திரமானது இவ்வூருக்கு மூன்று மைல் தூரத்திலிருந்தது. காடுகளால் சூழப் பட்டிருத்தலால் இவ்வூரை வனக் கிராமம் என்பார்கள். மந்திரத்திலிருந்து மகந்து சந்திரசேகரரும் மற்றும் அர்ச்சகர்களும் அடிக்கடி இவ்வூருக்கு வந்து வசிப்பதுமுண்டு. இம்மூவரும் படகிலிருந்து கரையிலிறங்கி மெல்ல மெல்ல நடந்து வனக் கிராமம் வந்தடைந்தனர்.

---

## அதிகாரம் 6 :—விமலா

மாலைக் காலமாயிற்று. அகன்ற வெளிகளுக் கிடையில் தனது உயர்ந்த மதிற்கைகளைப் பரப்பிக் கொண்டிருக்கும் சதுர்வேஷ்டித துர்க்கத்தின்

கோட்டைக்கு அழகைத் தரும் மாளிகைகள் பல நெடுந்தூரங் காணப்பட்டன. * யமுனை நதி கோட்



சதுர்வேஷ்டித துர்க்கம்

டையினைச் சூழ்ந்து ஓடிக்கொண்டிருந்தது. நாற்புறமும் இளம்பயிர்கள் பச்சைப் பசேலெனக் காணப்பட்டன. பகலவன் மேற்கடற்கரையை யடைந்தனன். வயல்களிலிருந்து தத்தம் இல்லங்களுக்கேகும் உழவர்களின் பேச்சொலி தவிர வேற்றொலி யொன்றும் செவியிற் படவில்லை.

இம்மாலையிருளில் துர்க்கத்திலிருக்கும் வீடுகளும் வீதிகளும் சரிவரக் காணப்படாவிடினும், முதல்

---

* யமுனை:—வங்காளத்திலுள்ள இந்த யமுனை, பிரயாகையின்கண் கங்கையிற் கலக்கும் யமுனையினும் வேறு.

வீதியிலுள்ள ஒரு மாளிகையிற் பலகணியின் வழி
யாக ஓர் ஒளியும், அந்த ஒளியில் கன்னத்தை
உள்ளங்கையில் வைத்துக் கவலையிலாழ்ந்து நின்று
கொண்டிருந்த ஒரு மடந்தையின் வடிவமுங் காணப்
பட்டன.

அம் மடந்தைக்குச் சுமார் பதினேழு வயதிருக்
கும். அவளுடைய முகத்தில் சிரத்தை, பரிவு,
பெருந்தகைமை, மரியாதை முதலிய சீலங்கள் குடி
கொண்டிருந்தன. அரவமற்ற அம்மாலையில்
வானத்தை இமையாது பார்த்துக்கொண்டே கவலை
யில் அவள் ஆழ்ந்திருந்தனள். அப்பொழுது ஓர்
ஆடவன் அவ்விடம் வந்து "விமலா" என்றனன்.

இம்மனிதனுக்கு வயது சுமார் ஐம்பதிருக்கும்.
ஆனல் பார்ப்பவர்கள் அவனை யறுபது வயது வரை
மதிப்பார்கள். அவன் சிகையெல்லாம் நரைத்திருந்
தன. நெற்றியிற் கவலையின் குறிகள் நன்கு பதிந்
திருந்தன. நேத்திரங்கள் அவனது தீயவொழுக்கம்,
பேரவா முதலியவற்றை வெளியிட்டுக்கூறுவனவாய்
இருந்தன. அவனே நமது விமலையின் தந்தை ஸதீச
சந்திரன்; வங்காளத்துத் திவான்.

தந்தை:— விமலா! ஏதோ பெருங் கவலையினால்
வருந்துபவள் போற் காணப்படுகின்றனையே.
உனக்கு நேர்ந்த துன்பந்தான் யாது?

மகள்:— நீங்கள் நாளைக்கு இங்கிருந்து புறப்
படப் போகிறீர்கள். நான் தனிமையாக இப்பயங்
கரமான கோட்டையில் தங்கவேண்டியிருக்கும்.
தந்தாய்! தாங்கள் ஆண்டுதோறும் வெளியே

போய்வருகிறீர்கள். எனினும், இந்தத் தடவை யென்னவோ என் மனத்தில் ஓர் அச்சம் உதிக்கிறது. நேற்றிரவு நான் ஒரு தீய கனவு கண்டேன். அதனால் தங்களை எங்கும் போகக்கூடாதென்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இவ்வாறு அவள் சொல்லி விம்மி விம்மி அழுதனள். தன்னருமை மகளின் துயரம் நிறைந்த இம்மொழிகளினால் தந்தையின் மனந் திடீரென மாறிற்று. ஏதோ ஒரு கொடிய பாதகத்தின் பயனை யின்று முதல் தான் அனுபவிக்கப்போவதுபோல் அவனுள்ளத்தில் ஒரு களங்கப் படலம் உதித்தது. மகளைத் தேற்றத் தொடங்கிய தந்தை, தன் மனக் கலக்கத்தை அடக்கிக்கொண்டு, "செல்வி! நீ வீணாக அச்சமுறுகிறாய். உண்மையைச் சொல். உனக்கு ஏன் இவ்வளவு கவலை?" என்று வினவினான்.

விமலை தந்தையை நோக்கி, "என் கவலைக்கு நீங்கள்தான் காரணம். கடந்த ஒருமாத காலமாக உங்கள் மனோவிகாரங்களைக் காணும்பொழுது, என் மனத்தில் தானாகவே கவலையினைகள் ஒன்றன் பின் ஒன்றாக மோதுகின்றன. உணவு கொள்ளும் பொழுது அதை அவாவுடன் சுவைத்து அருந்துவதில்லை; ஓரிரவேனும் நீங்கள் அமைதியுடன் கண் அயர்ந்ததை நானறியேன். சிறிது காலமாக உங்களிடம் இத்தனை இரகசியமான தூதர்கள் ஏன் வருகின்றனர்? நீங்கள் அப்படி இரகசியமாகச் செய்தற்குரிய சதியாலோசனைதான் யாது? ஓர் எளிய சிறுமி தங்களைப்போன்ற பெரியோர்கள் முயலுங் காரியங்களில் தலையிடுவது உசிதமன்று.

உங்கள் மேலுள்ள அன்பின் மிகுதியால் இவற்றைக் கூறலானேன். தீய இயல்பையுடைய பாம்பின் ஓட்டம் கோணலுள்ளதாயிருக்கிறது; கம்பீரமான யானையின் நடையோ நேர்மையாகவிருக்கிறது. ஆதலினால் தீயோரின் கூட்டுறவை விட்டுவிடவும், நன்மார்க்கத்தைக் கடைப்பிடிக்கவும் உங்களைக் கெஞ்சித் தாழ்மையுடன் வேண்டிக்கொள்கிறேன்'' என்றனள்.

விமலை கூறிவந்த ஒவ்வொரு சொல்லும் ஆணித்தரமாக ஸதீச சந்திரன் உள்ளத்திற் பதிந்தது. அவனுடைய மனச்சாட்சி தன் குற்றங்களையொத்துக்கொண்டு விமலையின் அறவுரைகளுக்கு இடந்தந்தது. அதனால் அவன் ஒன்றும் பதிலுரைக்க முடியவில்லை. ''சரி, பிறகு வருகிறேன்'' என்றியம்பி அவன் அவ்விடத்தை விட்டு அகன்றனன்.

---

## அதிகாரம் 7: பாவ உள்ளம்

விமலாவின் அறையைவிட்டு வெளியே வந்த ஸதீச சந்திரன் தன்னுடைய உத்தியோக நிலையத்திற்குச் சென்றான். அவனுடைய திவான் கானு வெகு அழகாயலங்கரிக்கப்பட்டிருந்தது. தரையின் மீது பலவித நாகரிகமான வேலைப்பாடுகளால் அழகுற்ற இரத்தினக் கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்தன. நடுவில் பெரிய விளக்கொன்று எரிந்துகொண்டிருந்தது. சுவரில் சக்கரவர்த்தியின் படமும், மலை, ஆறு, கோட்டை, நகரம் முதலிய பல இடவிசேடங்களைத் தனித்தனி காட்டும் ஓவியங்களும் வைக்கப்பட்டிருந்தன. நடுவிலிருந்த மேடையின்கண் இட்ட

தவிசொன்றில் ஒரு சிவப்புப் பட்டுமெத்தை விரித்து, அதன்மேல் திண்டு வைக்கப்பட்டிருந்தது. சுதன்மையனைய அம் மாளிகையில், ரமணீயமான அவ்விருக்கையில் வீற்றிருக்கும் இராஜாதிராஜன் திவான் ஸதீச சந்திரனின் மனம் இன்று ஏன் கலங்கியிருக்கவேண்டும்?

ஸதீச சந்திரனது மனம் தன்னருமைப் புதல்வியின் மொழியினால் திறக்கப்படவே, பல எண்ணங்களும் பண்டைச் செயல்களும் அவன்றன் அகக்கண்ணுக்கு ஒவ்வொன்றாய்ப் புலப்படுவன வாயின.

கடைசியாக அவனது அகக் கண்ணின் முன் தோன்றிய நினைப்பு யாதெனின், குடிகளைக் காக்கும் தீரனும், போரில் அஞ்சாத வீரனும், வங்க தேச ஜமீன்தாரனுமாகிய அந்த இராஜா சமர சிம்மனைச் சதி செய்து வதை செய்த பாவமே. அந்நினைவு வரவே, அவனுடைய உடம்பு மயிர்க் கூச்செறிந்தது. இதயம் படபட வென்றடிக்க லாயிற்று. "பாவத்தின் பிராயச்சித்தத்திற்கு இனி அதிகத் தாமதமில்லை" என்று அந்தச் சமர சிம்மனுடைய வெட்டுண்ட தலை தன் வாயைத் திறந்து கூறுவதுபோலத் தோன்றவே, அவன் மிகவும் அஞ்சி நடுக்கமுற்றான்.

கொஞ்ச நேரத்திற்குப் பிறகு அவன் "இக் கொலைப் பாவத்தைப் போக்கிக்கொள்ளும் வழி யாது? இன்று முதல் என் அருமருந்தனைய மகளின் நற்போதனையின்படியே நடந்துகொள்ளக் கட வேன்; இனிமேல் நான் அறநெறியையே கைக்

கொள்வேன். எப்படியாவது இக் கொலைப் பழி யொழிந்தாற் போதும்" என்று எண்ணமிட்டான்.

இவ்வாறாக ஸதீச சந்திரன் கழிவிரக்கமுற்ற வனாய்த் தன் ஆதனத்தில் வீற்றிருந்தபொழுது அங்கு வந்த சகுனி, "இன்றைக்குத் தாங்கள் ஒரு வாறு விசன முற்றிருக்க நிகழ்ந்த சம்பவம் யாது?" என்று வினவினான். அதற்கு மறுமொழியாக ஏதோ கூறத் தொடங்கிய ஸதீசன் சகுனியைப் பார்த்து, 'நல்லதோ கெட்டதோ, நாம செய்த வினைகளுக்கீடாகப் பலன் நுகர்ந்துதானே யொழிக்கவேண்டும். சகுனி! அன்று நீ சொன்ன வார்த்தையினாற்றான் நான் அக் கொலையைச் செய்யத் துணிந்தேன். இனி நீ செய்யக்கிடப்பது யாதுளது? என்னைச் சர்வநாசம் செய்தனை. போ, இன்னும் யாராவது ஒரு செல்வனைத் தேடி அவனை யும் தொலைக்கத் தலைப்படு. நான் இப்பொழுது இப் பாதகத்தைப் போக்கக் கழுவாயுளதேல் அதனை நாடுவேன்" என்று கூறினான்.

தலைவனுடைய பரிதாபமான இம் மொழிகள் சகுனியைத் திடுக்கிடச் செய்தன. இன்று ஏதோ விசேஷம் நடந்திருக்கிறதென்பதை யுணர்ந்த அந்த நரி, தன் கண்களின்றும் நான்கைந்து நீர்த் துளிகளை வருவித்து உகுத்ததோடு நடுக்கமுற்ற குரலுடன், "மகாராஜாவுக்கு அடியேன் மீது கருணையிருக்கவேண்டும். இப்போது திவான் அவர்களுக்கு உண்மையாகவே ஏதேனும் இடுக்கண் உளதேல், இந்த நாய் தன் தலையைக் கொடுக்கக் காத்துக்கொண்டிருக்கிறது" என்றான்.

ஸதீச :—சகுனி! நீ மிக இனிப்பாகப் பேசுந் திறனுடையை. உனது நஞ்சேயனைய உள்ளத்திற்கு மாறுக நான்முகன் இந்த இனித்த நாவையேன் படைத்தனன்?

சகுனி :—மகராஜ்! நான் கொடும் பாதகனே; இன்றேல் தங்கள்பால் உண்மையாகச் செலுத்திய எனது அன்பிற்குப் பலன் இவ்வாறு விளையுமா? (மீளவும் நீலிக் கண்ணீர் உகுத்து) பாவமேயாயினும் புண்ணியமேயாயினும், தங்களுக்கு மேலான பதவியை எது அளிக்குமோ, அந்தக்காரியத்தையே இந்த நாய் முயன்றது. அதில் இந்தப் பிராணியினுடைய சுயநலம் ஏதேனுமுண்டோ? இராஜா சமரசிம்மனது கொலைக்குக் கத்தி தீட்டியவன் இக்கொலையாளியே. எனினும், அதன் விளைவு பயன் பட்டது யாருக்கு? உண்மையை நோக்கில், அரசனையினற்றான் அச் சமரசிம்மன் கொல்லப்பட்டான். அவனது செல்வங்களைத் தாங்கள் கவரவில்லை; துரைத்தனத்தார் தங்களுக்குப் பரிசு வழங்கினர்.

ஸதீச :—சகுனீ! இப்பொழுது இனிப்பாகப் பேசி என் மதியை மயக்காதே. இன்று எனது ஞான விழிகள் திறக்கப்பட்டன. நான் புரிந்த பாவச் செயல்கள் ஒவ்வொன்றும் என் அகக் கண் முன் வந்து நிற்கின்றன. என் அருந்தவப் புதல்வி இவ் விழியைத் திறப்பித்தனள்.

சகுனி :—திவான் மகராஜ்! உலகியலொன்றுந் தெரியாத சிறிய பேதைப் பெண்ணின் மொழி

களால் தாம் ஏதோ பயமடைந்திருப்பதாகத் தெரி கிறது. நல்லது; நான் கேட்கிறேன்; அப்படித் தங்கட்கு நேரிட்டிருக்கும் ஆபத்துதான் யாது? டில்லி பாதுஷாவின் தானைத்தலைவன் மனுயிம்கான் தான் சமர சிம்மனுக்குத் தண்டனை விதித்தான்: அது நமது சதி யோசனையினலேயே நேர்ந்த தென்பது ஒரு குஞ்சுக்கும் தெரியாது. சமரசிம்மன் மேல் அன்புடைய இராஜா தோடர்மால், இதை எவ்வாருவது அறிந்து விடுகிருரோ வென்னும் அச்சம் தமதுள்ளத்தில் தோன்றக் காரணமில்லை. வதைக்குப் பின் இரண்டு வருடங் கழித்து அவ ரிங்கே வந்தபோது, நமது திறமையால் அதை மறைத்து விட்டோம். இப்பொழுது வங்க தேசத் துச் சேனைத் தலைவரும் சுபேதாருமாய் மறுபடியும் முங்கேரிக்கு வந்துகொண்டிருக்கு மவர், சமர சிம்மன் வதையை ஆறு வருடங் கழிந்த இற்றை வரை நினைவில் வைத்திருப்பாரென்பது வீணே. அப்படித்தான் அவர் நினைவிற்குக் கொண்டுவரி னும், முன்பு நாம் தப்பித்துக்கொண்ட சாமர்த்தி யங்கள் எல்லாம் எங்குப் போய்விட்டன?

ஒருகால் தாங்கள் அவரிடத்தில் உண்மையைச் சொல்லி மன்னிப்புக் கேட்பதாக விருப்பினும், தோடர்மால் தமது நண்பர் சமரசிம்மனின் கொலைக்குக் கொலை வாங்குவாரேயன்றித் தலை தப்பும் வழி உண்டா? உங்கட்கு விரோதமாகச் சுபேதாரிடத்திற் கோள்சொல்லத் துணிபவர் இப் பூமண்டலத்தில் யாரிருக்கின்றனர்? இன்னும் பாருங்கள்; இந்த ஆறு வருடமாய் வெளிவராத ஒரு செய்தி யின்று எப்படி வெளிவரும்? ஒருகால் வெளிவரின் இந்த நாய் இருந்தேயிருக்கிறது.

இவ்வாறு ஒன்றன்பின் ஒன்ருய்த் தனது மொழிகளென்னும் மோகனுஸ்திரத்தைச் சகுனி தொடுக்கவே, ஸதீசனுடைய உள்ளம் மாறி, மயக்க முற்றது. சகுனி சொல்லுவது முற்றிலுஞ் சரி யென அவனுள்ளத்திற் பதிந்தது. ஆதலால் ஸதீச சந்திரன் ஒன்றுந் தோன்ருதவனுய் மறுபடியும் சகுனியின் வலையிற் சிக்கிக்கொண்டனன்.

ஸதீச :— உருத்திரபுரத்திற்கு இரகசியமாக ஒற்றர்களை யனுப்பி யிருந்தோமே, அவர்களைப் பற்றி ஒரு சங்கதியுந் தெரியவில்லையே. இது பற்றிய நமது முயற்சியொன்றும் இதுவரை ஏன் பலிக்கவில்லை?

சகுனி :—நமது சதியாலோசனை அவளுக்கு ஒரு நாள் முன்பே எட்டிவிட்டது. அந்தப் பைத்தியக் காரிதான் அவளிடம் போய்ச் சொன்னதாகக் கேள்வியுற்றேன். அவளைப் பிடிக்க எவ்வளவோ முயன்றும், பல ஒற்றர்களை யனுப்பியும் அவளைக் கண்டு பிடிக்க முடியவில்லை.

ஸதீச :—பிறகு என்ன யுக்தி?

"கவலை சிறிதும் வேண்டா. விரைவிலேயே எல்லோருடைய வாயையும் நான் அடைத்துவிடு கிறேன். சகுனியின் கையிலிருந்து யாரும் நழுவிப் போவதில்லை. இரவு நெடு நேரமாகிவிட்டது. தாங்கள் சயனிக்கச் செல்லுங்கள்" என்று

சொல்லிச் சகுனி தன்னறையை நாடிச் சென்
னன். போகும்போது இரண்டொரு முறை ஸ
சந்திரனைப் பார்த்து, "நீயும் என் கையினின்
நழுவி விடவா போகிறாய்!" என்று தனக்கு
முணுமுணுத்துக்கொண்டே சென்றான்.

---

## அதிகாரம் 8 : வஞ்சகச் செயல்

மறுநாள் வைகறையில் ஸதீச சந்திரன் த
உத்தியோக ஆடம்பரத்துடன் முங்கேரிக்குப் பு
படும் சந்நத்தனாய் விடைபெற விமலாவி
விடுதிக்கு வந்தபோது, அவள் "தந்தாய்! நானிங்
தனித்திரேன்; என்னையும் உடனழைத்துச் செ
லுங்கள்! இன்றேல் மகேசுவர மந்திரத்
சென்று சில நாட்கள் தங்கித் திரும்பவா
அநுமதி யளியுங்கள். தங்கட்கு இடுக்கணென்
நேராவண்ணம் இமையவல்லி மகளை அங்
போற்றிவருவேன்" என்று குறையிரந்தன
ஸதீசன் தன் புதல்வியின் விருப்பப்படியே வி
யீந்து, தானும் அவளிடம் பிரியாவிடைபெற்றே
லானான்.

தன் புதல்வியினிடம் விடைபெறுவத
முன்பே, ஸதீசன் சகுனியிடம் விடைபெறச் சென்
பொழுது, அவன் "தாங்கள் முன்னே செல்லு
கள். சமரசிம்மனது இல்லாளையும் மகளை
சிறைப்படுத்தி, வேறு சில இன்றியமையாத வி
களையும் முடித்துக்கொண்டு நானும் தங்களைப் பி
தொடர்வேன்" என்று சொல்லியனுப்பினான்.

ஸதீசன் போகும்போது சகுனி, " நீ யொன்றுங் கவலைப்படாதே. இவ்வாறாக உன்னை............ கடைசிவரையில் நீ யென் புத்திநுட்பத்தைப் பற்றி மெச்சிக்கொண்டே யிருப்பாய். என் திறமையை நீ பார்க்க இனி அதிகக் காலமொன்றும் வேண்டா" என்று தனக்குள் சொல்லிக்கொண்டான்.

சகுனிக்கும் ஸதீசனுக்கும் பழக்கமேற்பட்டு எட்டு வருடங்களாயின. முதன் முதல் சகுனி அநாதையாய் ஸதீசனது உதவியை நாடி வந்தான். அப்பொழுது அவன் இருபது வயதுள்ள ஒரு முரட்டு வாலிபனாயிருந்தான். அவனது பரிதாபமான தோற்றத்தில் மனமிளகிய ஸதீசன் அவனைத் தனது மனையில் ஏற்றுக்கொண்டான். முதலில் குற்றேவலாளனாக அமர்ந்த சகுனி, தனது கூரிய புத்தியினால் படிப்படியாகக் கணக்கெழுதுவோனாகவும், காரிய நிர்வாகனாகவும் உயர்நிலைக்கு வந்து, இப்பொழுது ஸதீசனின் தோழனென்னும் நிலைமையிலிருக்கிறான். தோழனா? அவனை ஆட்டுவிப்போனாகவும் இருக்கிறான்.

இத்தகைய சகுனியை ஸதீச சந்திரன் தன் புதல்வனாகப் பாவித்தான். அவனைச் சுவீகாரப் புத்திரனாக எடுத்துக்கொள்ளவேண்டு மென்று அவன் சிற்சில சமயங்களில் நினைத்தது முண்டு. பின்னும் சில வேளைகளில் தன் புதல்வியை அவனுக்கு மணம் புரிவித்துத் தன் மருமகனாக்கி வீட்டிலேயே வைத்துக்கொள்ளவும் அவன் எண்ணினான்.

சகுனி ஸதீச சந்திரனுடன் முங்கேரிக்குப் போவதினின்றும் தப்பித்துக்கொள்வதின் பொருட்டே, மகா சுவேதையைக் கொண்டுவரும் முயற்சியில் முனைந்திருப்பதாகக் காரணங் கூறி அவனைமட்டும் அனுப்பினான்.

அன்று சதுர்வேஷ்டித துர்க்கத்தின் ஒரு விசாலமான வரவேற்பறையில், சகுனி தனிமையாக உலாவிக்கொண்டிருந்தான். அப்போது அவன் தனக்குள், "இந்த எல்லையற்ற ஜாகீருக்கும், மகத்தான துர்க்கத்திற்கும், அந்தப்புரத்திலிருக்கும் கட்டழகிக்கும் வெகு விரைவில் புதிய தலைவன் வாய்க்கப் போகிறான். விமலா! —இனி நீ என்ன செய்யப்போகின்றனை? உனக்கு இச்சையிருப்பினும், இல்லாமற்போயினும் நீ சகுனியைத் தலைவனைக் கொடுண்தான் தீரவேண்டிவரும். காதல் மேலீட்டினால் நான் உன்னை மணம்புரியப் போவதில்லை; காதலென்பது சிறுவர் சிறுமிகளின் விளையாட்டுக்களில் ஒன்றெனை நான் நினைக்கின்றேன். உனது வனப்பையும் ஒளியையுங் கண்டு மயங்கி உன்னை மணப்பதுமில்லை. அஃதெல்லாம் எனக்கு இலட்சியமன்று. சரி, பார்க்கின்றேன் ஒரு கை............ஸதீச சந்திரா! இன்று நான் உன்னை அனுப்பியது முங்கேரிக்கல்ல; எமபுரிக்கே. நான் இதற்காக ஏற்படுத்தியிருக்கும் சேவகன் ஓர் அசாதாரணமான வீரன். அன்றியும், சகுனியின் குற்றங்களெல்லாம் உன் தலையிலேயே சார்த்தப்படும். பிறகு சந்ததியற்ற இந்த விஸ்தாரமான ஜாகீர் முழுவதும் உனது மருமகனுக்குத்தான்" என்று நீள நினைத்தான்.

இதற்குள் அவனுடைய விழிகள் அந்தப் புரத்தை நாடின. பலகணியின் பாங்கர் விமலா நின்றுகொண்டிருந்தனள். தந்தை சென்ற வழியே அவள் நெடுநேரம் வரையில் இமையாது பார்த்தவண்ணமாயிருந்தனள். அழுதழுது அவளுடைய மலர்ந்த முகமானது வாடியிருந்தது. இன்னமும் அவளது விழியிணைகள் விண்மாரி போலக் கண்மாரி சொரிந்துகொண்டிருந்தன.

விமலாவின் பரிதாபகரமான இந்நிலைமையைக் கண்டு சகுனியும் கண்ணீர் சொரியலானன். பலகணியின் வழியாக அவளைப் பார்த்தபோது, அங்கிருந்து அகல்வதே நலமென அவனுள்ளத்தில் தோன்றிற்று. அதனல் உடனே அவன் அவ்விடத்தை விட்டகன்ருன்.

---

## அதிகாரம் 9 :— ஆலயத்தில் இருவர்

சதுர்வேஷ்டித துர்க்கத்திலிருந்து சுமார் பதினைந்து மைல் தூரத்தில் இச்சாமதி யாற்றங்கரை ஓரத்தில் பிரசித்திபெற்ற மகேசுவர மந்திரம் இருந்தது. மாலையில் மூடுபல்லக்கிலேறி விமலை அம்மந்திரத்திற்குப் பிரயாணமானுள். அவளுடன் இரண்டு மூன்று முதிய மாதரும், சேடியர் பலரும், சேவகர்கள் சிலரும் சென்றனர். வங்காள தேசத்திய மந்திரியின் ஏகபுத்திரிக்குரிய ஆடம்பரத்துடன் விமலா புறப்பட்டனள்.

அன்று விமலை தன் பரிவாரத்துடன் மகேசுவர மந்திரத்தை யடைய இரவு இரண்டு நாழிகை ஆயிற்று. உடன் கொணர்ந்த பொருள்களையெல்லாம் அறச்சாலையின் விடுதியில் ஒழுங்குற வைப்பித்துப் பிற ஏற்பாடுகளையும் அமைத்துவிட்டு விமலா கோயிலுக்குப் போகத் தொடங்கினள்.

இதுபோழ்து நீல வானில் சந்திரன் உதயமாயினன். எதிரில் மகேசுவர மந்திரத்தின் உயர்வான கோபுரம அந்நிலா வொளியில் மிகவும் வெண்மையாய்த் துலங்கிற்று. அறச்சாலையின்கண் கணக்கற்ற தீப வரிசைகள் ஒளி வீசிக்கொண்டிருந்தன. நடுமுற்றம் இப்பொழுது மாந்தர் வழக்கற்றிருந்தது. பகலில் எங்கு மானிடர் குழாம் இருந்ததோ, அங்கு இப்பொழுது நிசப்தம் குடிகொண்டிருந்தது. ஒருமையுற்ற உள்ளத்துடன் நெடுநேரம் அவள் இறைவனைத் தியானித்துக்கொண்டிருந்தாள். தனது உபாசனை முடிந்ததும் அவள் கடவுளை வணங்கி எழுந்தனள். மந்திரத்தினமைப்பிலும் அழகிலுங் கவனஞ் செலுத்திக்கொண்டே கோயிலை வலம் வரலாயினள்.

அப்பொழுது மந்திரத்தின் ஒரு புறத்தில் கண் வளர்ந்துகொண்டிருந்த ஓர் உபாசகனை விமலையின் கண்கள் கண்டன அவனுடைய நிரகற்ற பொலிவையும், வடிவின் எழிலையுங் கண்டு அவள் வியப்புற்றாள். விமலா, "இவன் யாரோ ஒரு வீர புருடன். ஏதோ காரியத்தின் பொருட்டுத் தூர தேசத்திற்குப் போகுமிடைவழியில் இந்த மந்திரத்தைக் கண்டு, தன் கருத்து நிறைவேற இறைவனை

வழிபடுதற்கு இவண் வந்திருக்கவேண்டும். நாள் முழுதும் வழி நடந்த களைப்பால் இங்குப் படுத்துத் துயில்கூர்கிருன்'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டனள். அப்பொழுது அவ்வாலிபன் துயில் கலைந்தெழுந்து உட்காரலானுன். தன் முன்னிலையில் தையல் ஒருத்தி நின்றுகொண்டிருப்பதை அவன் கண்டான். இவ்வாறு, வழிபாடாற்றிய இருவரும் சந்தித்தனர். "முன்பின் அறிமுகமில்லா ஓராடவனை நாணமின்றி நான் பார்ப்பதோ!'' என்று விமலை நாணித் தலை குனிந்த வண்ணமாய்க் கோவிலின்றும் புறப்பட்டு விரைவாய் அடிபெயர்த்துத் தன் விடுதியை மேவினள்.

விமலையின் உள்ளத்திற் பல ஐயப்பாடுகள் உதிக்கலாயின. இவ்வீர புருடன் யாராயிருப்பான்? இவன் மேற்கொண்ட வினை யாதோ? இவன் இறைவனை வழிபாடாற்றியது யாது கருதி? என இத்தகைய வினக்களைக் கேட்டுக்கொண்டே விமலா தனது சயன அறையை அடைந்தனள்.

---

## அதிகாரம் 10 :– அறிமுகம்

சயன அறைக்குச் சென்ற விமலைக்கு நன்ருக நித்திரை வரவில்லை. ஏதோ சிறிது உறங்கினள். அதுவும் கனவு மயமாகவே இருந்தது. விமலா கண் விழித்ததும் பலகணி வழியாய்க் கதிரவனுடைய இளங்கிரணங்கள் உட்புகுந்து அறை முழுதும் ஒளி பரப்புவதையும், வெளியில் எங்குப் பார்க்கினும் மாந்தர் தத்தம்வினைமேற்செல்வதையும் கண்டனள்.

அன்று பகல் முழுதும் விமலா ஒளி குன்றிய முகத்துடனும் உதாசீனத்துடனும் இருந்தனள். அடிக்கடி அவளுக்குக் கடந்த இரவின் நிகழ்ச்சிகளே நினைவில் வரலாயின.

அன்றிரவு சுமார் ஒரு நாழிகை யானவுடன் விமலா இறைவனை வழிபடற்கு மகேசுவர மந்திரம் புகுந்தனள். கோயிலை வலம் வரும்பொழுது முதல் நாள் சந்தித்த இளைஞன் எதிரில் நின்றிருப்பதை அவள் பார்த்துச் சற்றே தயங்கிநின்று, பின் தனது விடுதிக்குச் செல்லத் தொடங்கினள். அந்தக் கட்டழகி தன்னைப்பார்த்து, தன்னிடம் ஏதோ சொல்ல எண்ணி, நாணத்தாற் பேச மனந்துணியாது நடந்து செல்வதைக் குறிப்பினல் உணர்ந்த அவ்வீரன் அவள் அருகே போய், "தாங்கள் என்னிடத்தில் ஏதோ இயம்பக் கருதுகிறீர்களென நினைக்கிறேன்; என்னுடைய இவ்வெண்ணம் தவறில்லையேல், தங்களுடைய உத்தரவு என்னவோ அதைக் கூசாமல் என்னிடம் கூறுங்கள்" என்றனன்.

அவ்வார்த்தைகள் விமலையின் செவிகளில் அமிழ்தம் ஊற்றியதுபோற் புகுதலும் அவளுடைய இதயம் குளிர்ந்தது. சிலையினற் செய்த பதுமையைப்போல் அவள் அசைவற்றுத்தலைகுனிந்தனள். தனது மாற்றத்திற்கு மறுமொழி பகராது மங்கை தலை குனிந்த வண்ணமாய் நிற்பதைக் கண்ட இளைஞன் மீண்டும், "தங்களுக்கு ஏதாவது சொல்லிக்கொள்ளவேண்டுமேல் தெரிவியுங்கள்; அச்சமின்றித் தெரிவிக்கலாம்" என்றான்.

விமலை:— தாங்கள் யார்? இம்மந்திரம் வரற் கிருந்த காரணம் யாது?

வீரன்:—இந்திரநாதன் என்னும் பெயரினேன்; ஆதரவற்ற ஓர் ஏழைக்கு உதவிசெய்தலில் இறைவனது துணைவேண்டியே இங்கு வந்தது. அவ் வேழைக்கு ஒரு நியாயம் மாத்திரந்தான் தேவை. நான் மூங்கேரிக்குப் போய் அந்த நியாயத்தை யாசிப்பேன்.

மூங்கேரி என்னும் பெயரைக் கேட்டதும் விமலாவுக்குத் தன் தந்தையின் நினைவு வந்தது. ஸதீச சந்திரனுடைய ஆபத்தின் ஞாபகமேற்பட்டதும் அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் மகளிர்க்குரிய குணங்களெல்லாம் மறைந்துவிட்டன. கண்களில் நீர் ததும்ப அவள் இந்திரநாதனை நோக்கி, "தாங்கள் வீர புருடரென்று தங்கள் முகக் குறிகளால் அறியலானேன். இந்த ஏழையடியாள் தங்களிடம் ஒரு விண்ணப்பம் வேண்டுவள். அதை நிறைவேற்றித் தருவதாக முதலில் வாக்குறுதியளிக்கவேண்டும்" என்று பகர்ந்தனள்.

இந்தி:— என்னலாவது யாது? அதனை முழு மனத்துடன் செய்யகிற்பேன்.

விமலை:—வங்கதேசத்து அமைச்சராகிய ஸதீச சந்திரர் மூங்கேரிக்குப் போயிருக்கிறார். தற்சமயம் அவர் பயங்கரமான ஆபத்தில் அகப்பட்டுக்கொண்டிருக்கின்றார். அவருக்குத் தங்களாற் கூடிய உதவி புரிந்து அவரைக் காப்பாற்றவேண்டும்.

இவ்வேண்டுகோளைக் கேட்டதும், இந்திரநாத னுடைய வதனஞ் சற்றுச் சுருங்கியது. அதைக் கண்டு விமலா, "தாங்கள் ஏன் அவ்வாறு ஐயப்படு கிறீர்கள்? ஆபத்தில் அகப்பட்டவரை யாதரிப்பது தங்கள் குறிக்கோளன்றோ? ஸதீச சந்திரரைப் பற்றி ஏதாவது விபரீதமான செய்தி கேள்விப் பட்டிருக்கிறீர்களா? அஃதெல்லாம் முழுப் பொய். சகுனியே உண்மையான குற்றவாளி" என்றனள்.

இந்தி:— சகுனி யென்பவன் யாவன்?

விமலை:— சகுனி, ஸதீச சந்திரருடைய ராகு. அவன் தான் பூரணமான குற்றவாளி. ஸதீச சந்திர ருடைய உண்மையான சரித்திரத்தில் களங்கமே கிடையாது. மகராஜ்! ஸதீச சந்திரருக்குத் தாங் கள் இயன்ற உதவிபுரிய வேண்டுகிறேன்.

இம்மாற்றங்களைக் கேட்டதும் இந்திரநாதன் ஒன்றுந்தோன்றாது தயங்கினான். சற்று நேரத்திற் குப் பிறகு அவன், 'ஸதீச சந்திரன் உண்மையிற் குற்றமற்றவனேல், அவனைப் பாதுகாக்கப் பின் வாங்கேன். நல்லது, தாங்கள் யாவர்? தங்கள் பெயர் யாது?" என்று வினவினான்.

விமலை இதற்கெல்லாம் ஒன்றும் பதிலளியாமல் "தங்களை யின்னும் சற்று விரிவாக நான் அறிந்து கொள்ள முடியாதோ?" என்று உசாவினள். இந்திரநாதன், "தற்சமயம் என்னுடைய பரிச்சயம் இவ்வளவே போதும். நான் ஒரு காயஸ்த ஜமீன் தாருடைய மகன்; இராணுவக் கலையில் நிபுணனாகும்

பொருட்டு முங்கேரிக்குப் போய்க்கொண்டிருக்கிறேன்" என்றனன். பிறகு விமலை யரிதிற் பிரிந்து தளர் நடையுடன் தன் விடுதி சார்ந்தனள்.

---

## அதிகாரம் 11 : தானைத் தலைவன்

கங்கா நதி தீரத்திற்கு மிக்க வனப்பை யளிக்கும் முங்கேரியின் உன்னதமான கோட்டையின் நடுவண் ஒரு பெரிய வீதியில் ஓர் அழகிய மாளிகையிருந்தது. அதன் உப்பரிக்கையின்கண் வீரபுருடரொருவர் ஒரு தவிசின்மீது வீற்றிருந்தனர். இராஜா தோடர்மால் என்பவர் இவர்தான்.

இம்மாளிகையின் வெளிவாயிலிற் குதிரை வீரனொருவன் தன் வருகையை இராஜா தோடர்மாலுக்குத் தெரிவிக்கும்படி காவலாளனுக்குத் தெரிவித்துச் சற்றே உலாவிக்கொண்டிருந்தான். இவன் நமது இந்திரநாதனே.

இதுபோழ்து தோடர்மாலைச் சுற்றிலும் பரிசனங்கள் எவரும் அருகிலிருக்கவில்லை. நம்பிக்கையுள்ள இராஜதந்திரிகள் சிலரோடு யுத்த விஷயமான மந்திராலோசனை செய்துகொண்டிருந்தனர். அத்தருணம் ஒரு சிப்பாய் வந்து பணிவுடன் வணங்கி, "மகராஜ்! குதிரை வீரனொருவன் தங்களைக் காணும் அவாவுடன் உத்தரவை யெதிர் பார்த்து வாயிலில் நிற்கின்றான்!" என்று தெரிவித்தனன்.

**தோடர்:—** அவன் இந்துவோ, மகமதியனோ? அவனது வருகை யெதுபற்றியது?

சிப்பாய்:— அவன் ஒரு காயஸ்த ஜமீன்தாரின் மகனும். தான் தெரிவிப்பதைச் சமூகத்திற்ருன் தெரிவித்துக்கொள்வானும்.

இராஜா தோடர்மால் சற்று மௌனமாயிருந்து, 'வங்கதேசத்தில் சூரரும் பராக்கிரமசாலிகளுமான பல காயஸ்தஜமீன்தார்களிருக்கின்றனர். இவர்களின் உதவி நமக்கு இன்றியமையாதது தான்' என்று தமக்குள் சொல்லிக்கொண்டு அந்தச் சிப்பாயை நோக்கி, "நல்லது, போய் அவனை வரச்சொல்" என்றனர்.

இராஜா தோடர்மால் லாகூரிற் பிறந்தவர். இளமையிலேயே தந்தை இறந்துவிட்டதனல், இவர் வறுமையின் வாய்ப்பட்டனர் எனினும், ஈன்ற அன்னை மிக அருமைப்பாட்டுடன் இவரை வளர்த்து வந்தார். இவர் சிறு வயதிலேயே தமது புத்தி நுட்பத்தால் மக்களனைவரும் விரும்புமாறு நடந்து கொண்டார். இவர் முதலில் ஒரு சாதாரணமான எழுத்தாளர் (குமாஸ்தா) வேலையிலமர்ந்தார். படிப்படியாய் உயர்பதவிகள் பெற்று, இறுதியாகத் தமது நிகரற்ற அறிவின் வன்மையால் பல மேதாவிகள் கூடிய அரச சபையில் முதலிடத்தை வகிக்கலானர்.

அக்பர் பாதுஷா பாரதநாடு முழுவதிலுமுள்ள கொள்ளைக்காரர்களையும், இராஜத் துரோகிகளையும் ஒழித்து, எங்கும் அமைதியுண்டாக்கும் பொறுப்பை இராஜா தோடர்மாலின்மீது சுமத்தினர். அதனல், இவர் மூன்று முறை வங்கதேசத்தின்மேல் படையெடுத்துச் சென்றனர். அம்மும்முறையிலும் தமது

வீரத்தையும் ஒப்புயர்வற்ற போர்த்திறனையும் வெளிப்படுத்தினர். முதல் தடவை மனுயீம்கானுடைய விருப்பத்தின்படியும், இரண்டாம் முறை ஹுசேன் குலீகானுடைய கட்டளையின்பேரிலும் வந்திருந்தார். அந்த இருமுறைகளிலும் தமது திறமையினலேயே இவர் வாகை சூடினர். மூன்ருவதாகிய இம் முறையிலோ சுயமாகச் சேனைத் தலைவராய் வந்திருக்கின்றனர்.

சேனையாள் புதிய வாலிபனை யழைத்து வந்ததும் இராஜா தோடர்மால், 'உன் பெயர் யாது?' என்று வினவ, வந்தவன் "இந்திரநாத் சௌதரி" எனப் பணிவுடன் பதிலளித்தான்.

தோடர் :—இருப்பிடம்?

வந்தவன் :—நதியா ஜில்லாவில் இச்சாபுரம், மகராஜ்!

தோடர் :—உனக்குள்ள சேனைகளின் அளவை யாது?

வந்தவன் :—நாலாயிரங் காலாட்படை.

தோடர்:—இங்குத் தனிமையாக வந்த காரணம்?

வந்தவன் :—பாதுஷாவின் சேவை புரிய; தற்போது இந்தச் சேவகனை யிராணுவத்தில் அமர உத்தரவு அருளவேண்டும்.

என்றியம்பிச் சரேலென்று தன் உடைவாளை உறையினின்று முருவி இராஜா தோடர்மாலுக்குச் சலாம்செய்து, மீண்டும் அதை யுறையிலிட்டனன் இந்திரநாதன்.

தோடர் :—நீ தனிமையாக வந்து சேனையில் அமரும் நோக்கம் யாது ?

இந்திரநாதன்:—மகராஜ் ! கற்ற போர்க்கலைகள் அனைத்தையும் மறவாமல் விருத்திபண்ணும் பொருட்டே.

தோடர் :—எங்கள் சேனையில் கலகமூட்டும் பொருட்டு மாற்றார் அடிக்கடி இரகசிய ஒற்றர்களை யனுப்புகிறார்கள். உன்னை எவ்வாறு நம்புவது ?

இந்திரநாதன் (ஆவேசத்துடன்) :— காயஸ்த ஜமீன்தார் குலத்தில் எத்தகைய அவநம்பிக்கையும் வைக்க இடமில்லையே.

இராஜா தோடர்மால், "பல தடவைகளில் துஷ்டர்களும் மகா யோக்கியரைப் போல நடித்து, நம்பிக்கைத் துரோகஞ் செய்துவிடுகின்றனர். எனினும், எத்தகைய போலியாட்களையும் அவரவர் முகத்தினால் எளிதில் கண்டறியக்கூடும். இவன் யோக்கியனே" என்று சர்தார்களுக்குச் சொல்லி, இந்திரநாதனை ஆயிரம் படைஞரடங்கிய ஒரு சேனைக்குத் தலைவனாக்கினார்.

---

## அதிகாரம் 12 : தந்தையின் துயரம்

சந்திரசேகரரும் அவரது தோழர் கேசவாசாரி யாருமாகிய இவ்விருவர்களைத் தவிர வேறெவரும் மகாசுவேதையை அறியார். அன்றியும், அவள் இவண் வதியுஞ் செய்தி யெவரு மறியாவண்ணம் அவர்கள் மிக்க எச்சரிக்கையுடனு மிருந்தனர்.

ஒரு நாள் சந்திரசேகரரது மடத்திற்குப் பெரிய தனவானொருவர் விருந்ினராக வந்திருந்தார். அவரும் சந்திரசேகரரும் ஒத்த வயதினராகத் தோன்றினர். குடும்பக் கவலையினாலும், துக்கத்தினாலும் விருந்தினரது உடல் தளர்வுற்றிருந்தது. தலை நரைத்திருந்தது மாத்திரமன்று; புருவத்தின் உரோமங்களுங் கூட வெள்ளியனவாயிருந்தன. இந்த விருந்தினர் யார்? இவருடைய பெயரை முன்பே கேட்டிருக்கிறோம். இவர்தான் இச்சாபுரத்து ஜமீன்தார்; சுரேந்திரநாதனுடைய தந்தை நகேந்திரநாத் என்பவர்.

சந்திரசேகரருடைய பின்புறத்தில் ஒரு திரை மறைவில் மகாசுவேதாவும் தலையில் முக்காடிட்டுக் கொண்டு அமர்ந்திருந்தனள். கேசவாசாரியார் அவளிடம் மெதுவாக எதைப்பற்றியோ பேசிக்கொண்டும், இடையிடையே நகேந்திரநாதரைப் பார்த்துக் கொண்டுமிருந்தனர். ஸாரலாவும் அங்கு வந்திருந்த அமலாவும் ஒரு மூலையில் தங்கியிருந்தனர். இன்று அவர்களுடைய மகிழ்ச்சிக்கு ஓர் எல்லையே யிருக்கவில்லை. அப்பொழுது விருந்தினர் சந்திரசேகருடன் ஏதோ பேசத் தொடங்கவே, அவர்கள் எல்லோரும் தங்கள் பேச்சை நிறுத்தி அதைக் கவனிக்கலாயினர்.

நகேந்திரநாத் பெருமூச்செறிந்து, சந்திரசேகரரை நோக்கி, "ஸ்வாமிஜீ! என்னைப் போன்ற பாக்கியமற்ற மானிடன் இந்த உலகில் ஒருவனுமிரான். எனது பத்தினி விண்ணுலகேகிக் கிட்டத்தட்டப் பன்னிரண்டாண்டுகள் ஆயின.

"அருங்குணம் வாய்ந்த அவ்வுத்தமியினிடம் எனக்கொரு புதல்வன் பிறந்தனன். அவன் தன் அன்னையைப் போலவே உயரிய குணம் படைத்திருந்தான்; பிறர்நலம் பேணும் பெருந்தகையோன். என் கண்மணியையனைய அக்குமாரன் எங்கிருக்கின்றனனோ? ஹே! கண்ணிலி நான்முகனே! முதுமைப் பருவத்தில் இத்துயர் துய்க்கும்படி என் தலையில் எழுதினையா? என்ன பாவம் செய்தேனோ? மக்கட்பேறென்னும் செல்வத்தை யிழந்த வறியனாயிருக்கிறேன்" என்றனர்.

நகேந்திரநாதருடைய துயர், அங்கிருந்த அனைவர் உள்ளத்தினையும் உருக்கியது. மீண்டுமவர், "எனது இல்லாள் இல்லாளான துயரத்தை என் குலக்கொழுந்தாகிய சுரேந்திரநாதனைப் பார்த்து மறந்திருந்தேன். ஹா! சுரேந்திரநாதனைப்போன்ற வீர புருடனை யாரும், என்றும் எதிர்பார்த்திரார். தயை, தருமம், கல்வி, வீரம், சாகசம் இவைகளில் அவனுக்குச் சமானமானவர் யாவருளர்? இளம் பிராயத்திலேயே அவனுக்குச் சிங்கத்தைப் போன்ற பராக்கிரம மிருந்தது. மல்யுத்தத்திற் பெயர்பெற்ற எத்தனையோ தீரர்களை அவன் வென்றிருக்கிறான். குதிரையேற்றத்தில் அவனைப் போன்ற தேர்ச்சியுள்ள போர்வீரனொருவனை என் ஆயுளில் நான் கண்டதில்லை.

"எவரெவர்கள் சுரேந்திரனைப் பார்த்திருக்கின்றனரோ அவர்களனைவரும், "இவன் கர்ணனைப் போன்ற வள்ளல்; வீமனைப்போன்ற பலவான்; விசயனைப்போன்ற வெற்றியாளன்" என்பார்கள்.

" சுரேந்திரநாதன் பன்னிரு வயதுடையவனு யிருந்தபொழுது, ஒரு நாள் அவனை யழைத்துக் கொண்டு இராஜா சமரசிம்மரைப் பேட்டி காணப் போயிருந்தேன். அவர் வங்க தேசத்துச் சகல காயஸ்த ஜமீன்தார்களுக்கும் சிரோமணியாக விளங்கினவரென்பது தாங்களறியாததன்று. என்னையவர் தம் சொந்தச் சோதரனைகப் பாவித்து அன்பு பாராட்டிவந்தார் அன்றைய தினம் நாங்கள் வெகு நேரம் உரையாடிக்கொண் டிருந்தோம். எனது ஒரே செல்வனுகிய சுரேந்திர நாதனும் சமரசிம்மரது ஒரு தனிச் செல்வியாகிய ஸாரலாவும் எங்களுக்கெதிரில் விளையாடிக்கொண் டிருந்தனர். அதுகாலை அவ்விளங்கொடி, ஒரு மலர் மாலையைக் கொணர்ந்து, அதைச் சுரேந்திர னுடைய கழுத்திலிட்டனள். ஸாரலா சமரசிம்ம ருடைய கண்ணுக்குக் கண்ணைகவும், உயிர்க் குயி ராகவுமிருந்த அருந்தவப் புதல்வி. தமது குலக் கொழுந்தின் இச்செயலைக் கண்டதும், மகாராஜா வின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகியது. அப்பொழுது அவர், " நகேந்திரநாத்! ஸாரலா தானைக எந்த வரனை வரித்தனளோ, அவனுக்கே யவளை மணம்புரிவிப்பேன் " என்றூர். இதைக் கேட்டதும் எனக்குண்டாகிய உவகைப் பெருக்கிற் கோர் அளவு—எல்லை—இருக்கவில்லை. சமர சிம்மருடைய இந்த அருண்மொழிகளைக் கேட்டு நான் அவருக்கு மிக்க நன்றி செலுத்தினேன்.

" நான் அந்த வாக்கை நிறைவேற்றவில்லை. சமரசிம்மரின் மரணத்திற்குப் பிறகு அவருடைய அநாதையான மகளை யென் மகன் மணப்பதை

நான் நிராகரித்துவிட்டு, வேறு மடமங்கையரைத் திருமணம் புரிவிக்கும் முயற்சியில் தலையிட்டேன். என் மனதிற் கிசைந்த ஒரு பெருஞ் செல்வ மண மகளைத் தேர்ந்து, மணவினையை நடத்தத் தீர்மானித்தேன்.

"அன்றிரவே யவன் ஒருவருக்குஞ் சொல்லாமல் வீட்டிலிருந்து வெளிக் கிளம்பி எங்கேயோ போய்விட்டான். இதுவரையிலும் நான் அவனைக் காணப் பலவிடங்களிலுந் தேடியும் முடியவில்லை. எனது ஒரே புதல்வனை மீளவுங் காணத் திருவருள் பாலிக்குமாறு இறைவனை வழிபடற்பொருட்டே இங்கு வந்திருக்கின்றேன். நான் சமரசிம்மருடைய புதல்வியை, அவர் வாக்கை நிராகரித்தது, அவள் ஓர் அநாதையென்று மட்டுமல்ல; சமரசிம்மர் இராஜத்துரோகி யென்னுங் குற்றத்துக்குட் படுத்தப்பட்டனராதலால் அக் குற்றம் அவர் வமிசத்தையும் தொடருமோ வென்ற அச்சத்தாலும், திவான் ஸதீச சந்திரருடைய தயவுக்குப் பாத்திரமாகவேண்டுமென்ற அவாவினாலுமே."

என்று பேசப் பேசத் துக்கம் பெருகி, இறுதியில் அவர் பெருங்குரலெடுத்துக் கோவென்று கதறலானார். அதைக் கண்டு அனைவருடைய விழிகளுமே கண்ணீர் கான்றன. சந்திரசேகரர் வெகு நேரம் வரை அவரைத் தேற்றிக்கொண்டிருந்தார்.

மறைவிலிருந்த மகாசுவேதா திரையை நீக்கி, நாணமான பார்வையுடன் அவரைப் பார்க்கலானாள். அவளுடைய உடல் மயிர்க்கூச்செறிந்தது.

நகேந்திரநாதருடைய அவ் வார்த்தையைக் கேட்கும்பொருட்டே அவள் அங்கு உட்கார்ந்திருந்தனள்.

நகேந்திரநாத் அங்குத் தங்கியிருந்தபொழுது அவருக்குப் பணிவிடை செய்யுமாறு சந்திரசேகரர் குழந்தைச் சித்தமுள்ள ஸாரலாவை ஏவியிருந்தனர். அவள் ஜமீன்தாரருக்குத் தன் கையால் உணவு பரிமாறுவள்; படுக்கையை நன்றாக உதறி விரித்துவைப்பள்; பிற குற்றேவல்களையும் புரிவள். அந்தச் சாந்தமும், வினயமுமுள்ள பாலிகையின் சுறுசுறுப்பையும் பொறுமையையுங் கண்டு விருந்தினர் மிகவும் மகிழ்ச்சியுறுவர். ஒரு நாள் அந்த ஜமீன்தார் ஸாரலாவை நோக்கி, 'குழந்தாய்! நீ புரிந்துவருவதைப் போன்ற பணிவிடைகளை வெகு நாட்களாக நான் பெறவில்லை. நான் துர்ப்பாக்கியமுள்ளவனுயிருந்திராவிடில் இன்று உன்னைப் போன்ற வினயம், அன்பு, அழகு நிறைந்த மருமகள் என் பணிவிடைக்குக் காத்துக்கொண்டிருப்பாள். அத்தகைய பெண்திருவினுல் என் இல்லம் இன்று பிரகாசித்துக்கொண்டிருக்கும். அந்தச் சுகத்தை மலரவன் என் ஏட்டில் எழுதிலன்...............இருந்தால், இந்திரனை நிகர்த்த மகனுலும், இந்திராணியை நிகர்த்த மருகியாலும் சுவர்க்கம் போலத் திகழும் எனது அரண்மனை; இப்பொழுது அது காண்டற்கரியதோர் காடாயிருக்கின்றது" என்று சொல்லி ஸாரலாவைப் பாராட்டினுர்.

---

## அதிகாரம் 13 : சிறைவாசம்

ஒருநாள் இரவு தன் வீர வழிபாட்டை முடித்துக்கொண்டு வனக்கிராம மடத்தின் வெளியிலிருக்கும் தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்த மகாசுவேதை நித்திரையுற உள்ளே செல்ல எண்ணி எழுந்தாள். இதற்குள் ஓர் ஏவற் பெண்டு அங்கு வந்து அவளுடைய செவியில், “இராணி சாஹேப்! தாங்கள் சதுர்வேஷ்டித துர்க்கத்திலிருந்து வெளிவந்த பிறகு, தங்கள் பிறந்தகத்துச் சுற்றம் தங்களையும் ஸாரலாபாயையும் எங்கெங்குந் தேடினர்; தங்களுக்காக எல்லோரும் உள்ளங் கலங்கி நின்றனர்; அழுதனர்; அஃதெல்லாம் இப்பொழுது சொல்ல முடியாது. இத்தனை நாளுக்குப் பிறகு இப்பொழுதுதான் தாங்கள் அகப்பட்டீர்கள். ஸாரலாபாயின் பாட்டியார் தன் செல்வப் பேர்த்தியின் முகத்தைப் பார்க்கவேண்டுமென்கிற இச்சையால் எந்தெந்தத் தேயங்கட்கெல்லாம் ஒற்றரை அனுப்பித் திருவினார். அவை அனைத்தையுங் கூற இதுதானா சமயம்? என்னுடன் வந்து படகிலேறுங்கள். நான் யாரென்பது தங்களுக்குத் தெரியவில்லையா? நான் சதுர்வேஷ்டித துர்க்கத்தில் தங்கள் பழைய வேலைக்காரி” என்றனள்.

தன் பிறந்தகத்தின் செய்தி வரவே, சுவேதையின் மனம் மாறலாயிற்று. அவசரத்தோடு அவசரமாய்த் தன் புதல்வியை அழைத்துக்கொண்டு அவள் அந்தப் பாங்கியுடன் ஆற்றங்கரை வந்ததும், பாங்கி மகாசுவேதைக்குப் படகைக் காண்பித்தாள். படகு வெகு வேகமாய்ப் போகக்கூடியதாயிருந்தது.

அதில் பத்துப் பன்னிருவர் படகோட்டிகள் கையில் தண்டை வைத்துக்கொண்டு நின்றனர். படகி லிருந்து யாரோ ஒரு வயது சென்ற மாது மகா சுவேதையைத் தன்னருகில் வரும்படி கையாற் குறிப்பித்தாள். அதன்படி மகாசுவேதை தன் கன்னிகையுடன் படகிலேறியுட்கார்ந்தாள். ஏறி



னதுதான் தாமதம். உடனே படகு வெகு வேக மாய்ச் செல்லலாயிற்று. மகாசுவேதையை அழைக்கவந்த பாங்கி அந்தப் படகில் ஏறவில்லை. படகிலிருந்த கிழவி ஸாரலாவின் பாட்டியல்லள். கிழவி வேடம் பூண்டவன் சகுனியின் ஒரு தூதன். மகாசுவேதை யின்று தன் மகளுடன் சகுனியின் வஞ்சனையில் அகப்பட்டுக்கொண்டாள்.

காலை நேரம் கதிரவனுடைய கோமளமான சுவர்ண வர்ணக் கிரணங்களால் சதுர்வேஷ்டித துர்க்கம் மிகவும் அலங்காரமாய்க் காணப்பட்டது. மாளிகை, முற்றம், அறைகள், தூண்கள், பலகணிக ளெல்லாம் ஒளிமயமாய் இலங்கின.

உலகம் முழுவதும் ஆனந்தத்தால் நகை செய்துகொண்டிருப்பதாகத் தோன்றும். இவ் வேளையில் அந்த உன்னதமான கோட்டையின் ஒரு கூடத்தில் மகாசுவேதாவும் ஸாரலாவும் வெகு துக்ககரமாக அலங்கோலத்தோடு படுத்துக்கொண் டிருந்தனர். சகுனியின் ஒற்றர்கள் அவர்களைச் சிறைப்படுத்தினர். ஸாரலா தன் அன்னையைக் கட்டிப் பிடித்துக்கொண்டு படுத்திருந்தனள். இரவு முழுவதும் நித்திரையின்மையால அவள் இப்பொ ழுது பெருந் துயிலி லாழ்ந்திருந்தாள்.

மகாசுவேதா ஸாரலாவை மார்போடணைத்துக் கொண்டு படுத்திருந்தாள். அவளுக்கு நித்திரை வரவில்லை. அவளுடைய கண்கள் கனலைப்போற் சிவந்திருந்தன; அவளுடைய ஆனனம் முழுவதிலும் உன்மத்தத்தன்மையின குறி காணப்பட்டது. நெற்றியிலிருக்கும் நரம்புகளெல்லாம் மிகவும் விறைப்பாக விருந்தன. சற்று நேரத்தில் ஸாரலா நித்திரை தெளிந்து உட்கார்ந்து தன் அன்புடைய அன்னையைப் பார்த்து, "அன்னாய், இரவு முழு வதும் தூங்கவில்லையா?" என்று கேட்க, மகா சுவேதா பதில் ஒன்றுமளிக்கவில்லை. ஸாரலா மறுபடியும், 'அன்னாய், இன்றைக்கு ஒன்றும் புசிக்கவில்லையே? புசியாவிடில் உயிர் எப்படி நிலைக்கும்?' என்றாள்.

**மகாசுவேதா:—** உயிரைக் காத்துக்கொண்டு இப்பொழுது செய்யவேண்டியதென்ன இருக் கிறது? இறைவன் கருணை புரிந்து என்னை இதற்கு முன்பே இவ்வுலகினின்றும் விடுதலை செய்திருப் பின் இத்தகைய நிகழ்ச்சி நேர்ந்திராது.

ஸாரலா :— (நெஞ்சடைக்க) அன்னாய்! இஃது என்ன சொல்லுகிறீர்கள்? உமக்குப் பிறகு நான் யார் முகத்தைப் பார்த்துக் காலத்தைக் கழிப்பேன்?

மகாசுவேதா :— (நீர் ததும்பிய கண்களுடன்) இல்லை; நான் போகுங் காலம் இன்னும் வரவில்லை.

இவ்வாறு அந்தத் தாயும் மகளும் பேசிக் கொண்டிருக்கையில் அவ்விடுதியின் வாயிலில் வாடிய முகத்தோடு ஒரு மடவரல் நின்றுகொண் டிருந்தனள். அவள் யார்? தயாள சீலையாகிய விமலை. சிறைப்பட்ட மங்கயைரின் அலங்கோலக் காட்சியைக் கண்டு தன் துக்கத்தினல் உள்ளம் உளைந்து, "அம்மா! தங்கள் துக்கத்தைக் கண்டு என்னுள்ளம் உடைந்துவிட்டது தாங்கள் இங் கிருக்கவேண்டா. என்னோடு உள்ளே வாருங்கள்" என்றாள்.

அந்த நங்கையின் வாயினின்றும் வந்த கருணை மொழிகளைக் கேட்டு. மகாசுவேதா அவளைப் பார்த்து, "நீ யார்?" என்று வினவ, விமலா "இக் கோட்டையின் தலைவராகிய ஸதீச சந்திரரின் மகள் நான். என் பெயர் விமலை" என்றனள்.

மிதமிஞ்சின கோபத்தால் மகாசுவேதாவின் உடம்பெல்லாம் பற்றியெரியலாயிற்று. சற்றுப் பொறுத்து, "போ, உன் தகப்பனிடத்திற் போய், "இனியென் ஆயுள் மிகவுங் கொஞ்சந்தான் எஞ்சி யிருக்கிறது; இந்த எஞ்சிய ஆயுளையேனும் என்னை ஏகாந்தமாகக் கழிக்கவிடு; அடிக்கடி என்னை வருத் தாதே' என்று நான் கூறுவதாகச் சொல்" என் வெடுவெடுப்பாய்க் கூறினள்.

**விமலா** (கண்ணீர் சொரிந்துகொண்டே) "அம்மா, அந்த ஜகதீசனை நினைத்துச் சொல்லு கிறேன். நான் உங்களுக்குத் துன்புறுத்த வர வில்லை. உண்மையில் எந்தை தங்களுக்குத் தீமை செய்தவரல்லர். அந்தக் கொடியோன் .... அவன் பெயரைச் சொல்லவும் வாய் கூசுகிறது. எல்லாம் சொல்லுகிறேன் ; மேல்மாடிக்குப் போவோம். வாருங்கள்" என்றனள். தீன சுரத்துடன் விமலை செப்பிய இதைக் கேட்டதும், அத்தகைய உத்தமி யினிடம் தான் வன்சொல் வழங்கினமைக்குச் சுவேதை கழிவிரக்கங் கொண்டனள்.

விமலா ஸாரலாவைத் தன் சோதரியைப்போற் கருதிக் கரத்தைப்பற்றி அன்புடன் பேசிக் கொண்டே மேல்மாடிக்கு அழைத்துச் சென்றனள்.

---

## அதிகாரம் 14 : கனவல்ல நனவே

ஸாரலாவின் மனத்திற்குச் சற்று ஆறுதலுண் டாகவேண்டுமென்று, விமலா மெல்ல மெல்லத் துர்க் கம் முழுவதும் சுற்றிக் காண்பிக்கலானாள். துர்க்கத் தின் பின்புறத்திலிருக்கும் உத்தியான வனத்திற்கு முதலில் அவளை யழைத்துச் சென்றாள். அங்கு அடர்ந்த மாமரங்களின் நிழலால் நண்பகல் ஏற்பாடு போலத் தோன்றலாயிற்று. இருவரும் அந்தக் குளிர் நிழலிற் சற்றே யுட்கார்ந்திருந்தனர். பிறகு சோலை யிலிருந்து அவ்விருவரும் பொய்கையினருகிற் போந் தனர்; நெடுநேரம்வரையில் அவர்கள் அவ்வாவியின் கரையில்அமர்ந்திருந்தனர்.அங்கு அவ்விருவருடைய

உள்ளமும் அமைதி யுற்றிருந்தது. விமலா இடை இடையே பேசிக்கொண்டிருந்தனள். ஸாரலா பேசாமல் அனைத்தையுங் கேட்டுக்கொண் டிருந்தாள்.

மாலை வேளையாயிற்று. விமலையும் ஸாரலாவும் சோலையிலிருந்து துர்க்கத்திற்குச் சென்றனர். பிறகு விமலை தன் தோழிக்குத் துர்க்கத்தின் ஒவ்வோர் அறையிலுமுள்ள பலவித விலையுயர்ந்ததும், அரியதுமான பொருள்களைக் காட்டத் தொடங்கினள்.

அவ்வறைகளைப் பார்த்ததும் ஸாரலாவின் வருத்தம் அதிகரித்தது. அதைக் கண்டு விமலா, "என்ன இது! மறுபடியும் நீ கவலையுறுகின்றனை" என்று அவளது அன்னையின் பக்கல் அவளை அழைத்துச் சென்றனள். தன் அன்னையை இறுகத் தழுவிக்கொண்டு, "அன்னாய்! நான் கனவு கண்டுகொண்டிருக்கிறேன். இவ்விடத்திலிருக்கும் பொருளனைத்தையும் நான் முன்பு எப்பொழுதோ ஒரு முறை பார்த்திருக்கவேண்டுமென்றெனக்குத் தோன்றுகிறது" என்றனள் ஸாரலா.

மகளின் பேச்சை மகாசுவேதாவால் மேலே கேட்க முடியவில்லை. அந்தப் பேதைப் புதல்வியின் பேச்சினால் அவளுடைய உள்ளம் உடைந்துபோய் விட்டது. சோகத்தின் முதல்வேகம் குறைந்த பிறகு, மகாசுவேதா மகளைத் தழுவிக்கொண்டு, "குழந்தாய்! இது கனவல்ல; நனவே. இதுவரையில், நான் இரகசியமாய் வைத்திருந்த செய்தி, இன்று தானாகவே வெளிப்பட நேர்ந்தது. இனி

யுன்னிடத்தில் எதையும் மறைக்கவேண்டிய அவசிய மில்லை'' என்று ஸாரலாவின் பிறப்பின் சரித்திரம், இராஜா சமரசிம்மரின் மாண்பு பொருந்திய வரலாறு, அவருடைய அநியாய வதம், ஸாரலாவுடன் தான் வெளிப்போந்தமை முதலிய அனைத்தையும் அவள் தன் புதல்விக்குத் தெரிவித்தனள்.

சுவேதை தன் வரலாற்றைச் சொல்லிவந்த பொழுது விமலாவும் அருகிலேயே யுட்கார்ந்து கேட்டுக்கொண்டிருந்தனளாதலால், அவளுடைய உள்ளம் மிகவும் நொந்து போயிற்று.

இக்கவலைக்கனவிலிருந்து விழித்ததும் விமலா சுவேதையை நோக்கி '' அம்மா! அந்தப் பாதகன் சகுனி செய்த தீமையின் விளைவு இவ்வளவு நாட்களுக்குப் பிறகு இன்றுதானெனக்குத் தெரிய வந்தது. இப்பாதகத்திற்குத் தக்க தண்டனையும் அவனுக்குக் கிடைக்காமற் போகாது'' என்றனள்.

சகுனி துர்க்கத்தின் கோட்டை வாயிலிற் காவலாளர் பலரை நியமித்து, ''இங்கிருந்து ஒரு குருவியும் வெளிப்போகாதபடி காவல்புரிமின்'' என்று உத்தரவிட்டிருந்தானாதலால் சிறையிலடைபட்டமாதர், விமலையின் ஆணையினாற் கோட்டைக்குள் உலாவுவதைப் பொருட்படுத்திலன்.

---

## அதிகாரம் 15: விமலையின் நிராசை

விமலா, ஸாரலாவைத் தன் சயன அறைக்கு அழைத்துச் சென்றாள். இவ்விருவரும் உடன் பிறந்த சகோதரிகளைப்போல் ஒரு படுக்கையிற்

படுத்துக்கொண்டனர். ஸாரலாவைப் பார்த்த நிமி டம் முதல் விமலாவின் மனத்தில் ஓர் அநுதாபம் ஏற் பட்டிருந்தது. ஸாரலா இப்படி உதவியற்றவளாவ தற்குக் காரணம் சகுனியும் தன் பிதாவுஞ் செய்த கொடுமைதானென்ன அவள் நெஞ்சுற உணர்ந்தாள். அதுமுதல் அவளுடைய அநுதாபம் இன்னும் அதி கரித்தது. பிதா புரிந்த கோரமான பாதகம் ஒழிவ தற்கு ஏதேனும் உபாயமிருக்குமாகில் அது மகா சுவேதா, ஸாரலா இவ்விருவர்பாலும் உண்மையான அன்பு பாராட்டுவதும், அவர்களுடைய நலத்தைப் பற்றி மிதமிஞ்சின கவலை யெடுத்துக்கொள்வதுந் தான் என்று அவள் நினைத்தாள். அதைச் செய் கையிலுங் காட்டத் தொடங்கினாள். இன்று ஒரே படுக்கையில் படுத்த விமலாவும் ஸாரலாவும் வெகு நேரம் வரையிற் பேசிக்கொண்டிருந்தனர்.

ஸாரலா:— தோழீ! இந்தத் துர்க்கத்துக்கு அரசியாகிய தங்கள் வரலாற்றை நான் தெரிந்து கொள்ளலாகாதா?

விமலை:—அரசியா? நான் ஒருபோதும் அரசி யாகப் போவதில்லை. இந்தத் துர்க்கம், இந்த ஐசு வரியம், இந்த வைபவம் எல்லாம் இப்பொழுது என்னுடையனவல்ல.

ஸாரலா:— ஏன்?

விமலை:— நான் முன்பே மொழியவில்லையா? அந்தப் புலைமகன் சகுனி யெந்தையின் உயிரை மாய்த்து, இந்தத் துர்க்கத்தையும் ஜமீனையும் அப கரித்துக்கொள்ளும் முயற்சியிலிருக்கிறா னென்று.

நான் துர்க்கத்துக்கு அரசியல்ல—துக்கத்துக்கு அரசி. அத்துக்கம்-கேவலம் என்னைப்பற்றியதோ? அன்று—எந்தையைப்பற்றியதே. அப் பாதகன் என்னை மணம் புரியத் தனக்குள் தீர்மானித்திருக்கின்றானும். எந்தைக்குப் பிறகு இந்த இராஜ்ஜியமெல்லாம் தன் கைக்கு வந்துவிடுமாம். இசையேனெனில் பலாத்காரமாகவும் என்னை மணம் செய்துகொள்ளப்போகிறானும் (என்று பேசும் பொழுதே விமலா விம்மி யழலானாள்). இத்தீயோன் கையினின்றுந் தப்பி, நேரே போய்ச் சதீசரென்னும் வாளால் அந்த நச்சுமரத்தை வெட்டியெறிந்து மறுவேலை பார்ப்பேன். பிறகு யெந்தையைப் பிரார்த்தித்து, இந்தத் துர்க்கத்தை மறுபடியும் உன் அன்னைக்குக் கொடுத்தவிடும்படி செய்வேன். நான் எந்தையின் உள்ளத்தை நன்குணர்வேன். என் வேண்டுகோளை யவர் மறார். அன்றியும் முங்கேரியில் இந்திரநாத் என்ற வீர புருஷரிருக்கிறார். அவரும் இக்காரியத்தில் எனக்கு உதவிபுரிவார்.

'இந்திரநாத்' என்னும் பெயரைக் கேட்டதும் ஸாரலா திடுக்கிட்டனள். அவள் உடம்பில் மயிர்க்கூச்செறிந்தது. அதைக்கண்டு விமலா வியப்புற்று ஸாரலாவை நோக்கி, "தோழீ! நீ திடீரென்று திடுக்கிட்டனையே, அஃதேன்?" என, ஸாரலா முன்றானையால் முகத்தை மூடிக்கொண்டனள். கடைசியில் விமலா மிகவும் வற்புறுத்தினபோது, அவள் "இந்திரநாத் என்னும் பெயருடைய ஒருவர் எனக்கு அறிமுகமானவர். அவரும் முங்கேரிக்குத்தான் போயிருக்கிறார்" என, நுண்மதியினளாகிய விமலை

மெல்ல மெல்லச் செய்திகளனைத்தையும் ஸாரலாவின் வாயினின்றுங் கிரகித்துக்கொண்டனள். 'இந்திரநாத், ஸாரலாவின் உள்ளத்திற் குடிகொண்டவன்—இருதயேசுவரன்—ஆருயிர்த் தலைவன்' என்று அங்கை நெல்லியென அறிந்துகொண்டனள்.

மகாசுவேதை, ஸாரலா இவர்களின் விடுதலைக்காக இரண்டு மூன்று மாதங்களுக்குமுன் இந்திரநாத் முங்கேரிக்குப் போயிருக்கிறான். தான் மகேசுவர மந்திரத்திற் கண்ட இந்திரநாத் அவனேயாதல் வேண்டும் என்று நினைக்க, விமலாவின் உள்ளம் நடுக்கமுற்றது. அவள் மெல்ல மெல்ல இனியொரு செய்தியையும் கேட்டறிய விரும்பி, "தோழீ, ஸாரலா! அந்த வீர சீலர் எப்பொழுதேனும் மகேசுவர மந்திரத்திற்கு வந்திருக்கிறாரா?" என்றனள்.

ஸாரலா :—ஆம், எங்களை உருத்திரபுரத்தினின்றும் மகேசுவர மந்திரத்துக்குக் கொண்டுவந்தவர் அவரே. அவர் அங்கு மூன்று தினங்கள்வரை தாமதித்தார்.

இதைக் கேட்டதும் விமலையினுள்ளம் இடிந்து போய்விட்டது. உடனே அவள் ஒன்றும் பேசாமல் ஸாரலா இருக்குமிடத்தில் முதுகைத் திருப்பிப் படுத்துக்கொண்டனள். அவள் நித்திரையிலாழ்ந்தாளென நினைத்துப் பாலிகை ஸாரலாவும் நித்திரையிலாழ்ந்தாள்.

---

## அதிகாரம் 16 :—போலி யன்பு

பொழுது விடிந்தது. இன்றைப் பொழுது என்ன பயனைத் தருமோவென விமலா மிகவுங் கலக்கமுற்றிருந்தனள். எனினும், வருமுன்னர்க் காக்கும் திறமையுற்ற அம்மாதர் சிரோமணி, தன் மதிவன்மையினால், நேரும் இடையூற்றினின்றும் தப்புதற்கேற்ற சூழ்ச்சிகளை முன்னரே யமைத்து வைத்திருந்தனள். அவள் சூழ்ச்சிகளுள் முதலாகக் கொண்டது இறைவன் வழிபாடே. வழிபாடு முடிந்து விமலா வெளியில் வர நெடுநேரமாயிற்று. அங்குச் சகுனி தன்னை எதிர்பார்த்து நிற்பதைக் கண்டு அவள் திடுக்கிட்டாள்.

சகுனி (புன்சிரிப்புடன்) :— விவாகத்திற்கு முன் மாதரனைவரும் இப்படித்தான் செய்வது வழக்கம். புக்ககம் போகும்போது விம்மி விம்மி யழுவார்கள். ஒரு தரம் மாமியார் வீட்டிற்குப் போய் விட்டால் பிறகு பிறந்தகம் வர இச்சிப்பதில்லை.

விமலா :—தந்தை யிங்கிருந்திருப்பாரானால் இப்படிப் பேசத் துணிந்திருக்கமாட்டாய். அவர் இங்கில்லை; அதனால் இப்படி மரியாதையற்றுப் பேசத் துணிந்தனை. நீ யிங்கு முதலில் ஒரு சேவகனாக வந்து சேர்ந்தனையன்றோ? தன் பிதாவின் சேவகனுக்கு மாலையிட விமலா ஒருபோதும் சம்மதியாள்.

சகுனி (கோரணையுடன்) :—அப்போது ஒரு சேவகன்; இப்பொழுது ஓர் அதிகாரி, எதற்கு? உனது வாழ்விற்கும் — மரணத்திற்கும் — உன்னை பதாத்காரம் செய்வதற்கும் —அதிகாரி.

சகுனியின் இவ் வார்த்தை காதில் விழவே, விமலா ஒரு கணம் அறிவற்றளாயினள். எனினும், அவளுடைய மனத்திட்பம் இனனும் அவளைவிட்டகன்றிலது. இனிக் கோபத்தினலும் வீரத்தினலு மாவதொன்றில்லை. "கிளைஞரில் போழ்து சினம் குற்றம்". சாமோபாயத்தினல் தப்புவதே தகுதியென்று தனக்குள் தீர்மானித்துக்கொண்டு பின் வரும் போலியுரைகளைக் கூறலானள்.

"அன்பார்ந்த நண்ப! நீ யென்னிடம் கொண்டுள்ள அன்பினழத்தை நிலை கண்டறியும் பொருட்டே நான் இவ்வாறுன்னைப் பரீட்சித்தது. உண்மையில் உன்னை நான் எவ்வளவு விசுவாசிக்கிறேனென்பதைக் கடவுளே யறிவார். உன்னைத் தவிர எனக்கு வேறு யார் ?" என்று சொல்லி, அவனிடம் தான் காதல் காட்டுவதாக நடித்துச் சற்று நேரத்திற் சகுனியைத் தன் வயப்படுத்திக்கொண்டனள். இப்பொழுது விமலையின் வார்த்தை சகுனியென்னும் பம்பரத்துக்குச் சாட்டையாக இருந்தது. "பிறகும்பொழுதே சகுனிக்கு மணவாட்டியாகவெனத் தலையிலெழுதியிருந்தால், இப்பொழுது அதை மீறி நடக்கப்போமா?" என்று தான் திரித்த கயிற்றுக்கு இன்னும் கொஞ்சம் முறுக்கேற்றினள். அவள் திரித்த கயிறு சகுனிக்கு மூக்கணங்கயிறுமாயிற்று.

சகுனியின் ஆனந்தத்திற்கோர் எல்லையேயிருக்கவில்லை. மகிழ்ச்சி உச்சிக்கேறிற்று. விமலை இதுதான் சமயமென்று, "சரி, இனி யெத்தனை நாளைக்குத்தான் காத்திருப்பது ? இன்றே மணம்

மூடிப்பது நலம். ஓ! மறந்தேன். இன்று மரண யோகம்; நாளை நல்ல நாள்; நாளைத் திருமண நாள்; ஞாபகமிருக்கட்டும். பாங்கியர் வரும் நேரமாயிற்று; உத்தரவு பெற்றுக்கொள்கிறேன்; நாளைசகு முற்பகலிற் சந்திக்கவேண்டும்" என்றியம்பிவிட்டு அடிசிற்சாலை புக்கனள். விமலையின் நடிப்பை முற்றிலும் நம்பிய சகுனி, 'அவள் கருத்தின்படியே விட்டுப் பிடிப்போம். கைக்கெட்டியது வாய்க்கெட்டாமற் போகுமோ? நம்மை மீறியிவள் எங்குப் போய்விடுவாள்? கிணற்று நீரை வெள்ளங்கொண்டு போவதுண்டா?" என்று கவலையின்றியே தன்னகஞ் சார்ந்தனன்.

ஏற்கனவே தான் வகுத்திருந்த ஏற்பாட்டின்படி அன்று நடுநிசியில், தன்னரண்மனையை விட்டு வெளிக்கிளம்பினள் விமலை. மேலே யெல்லையிலா நீலமும் தூய்மையும் வாய்ந்த வானம்; புவியில் நாற்புறமும் வயல்கள்; அவைகளுக்கிடையே சிறு சிறு குடிசைகள்; யாவும் நித்திரையிலாழ்ந்திருந்தமையால் எங்குப் பார்க்கினும் மௌனம். இவ்விளவேனிற்கால நள்ளிரவில் வெகு வேகமாய் ஓடும் அந்த அகன்ற ஆற்றில் சிறியதோர் படகு துரிதமாயோடிற்று. இருவர் மங்கையர் அதில் உட்கார்ந்திருந்தனர். அவர்கள் நமது விமலாவும் அவளது பாங்கி யொருத்தியும். பக்கத்தில் ஒரு சிறிய துணி மூட்டையிருந்தது. அதில் கொஞ்சம் சிற்றுண்டியும், ஒரு சிறு பணப்பையும் இருந்தன.

தமியளாகிய அந்தப் பெண்மணியின் உள்ளத்தில், "தந்தை மறுபடியும் சந்திப்பாரா? மகாசுவேதா,

ஸாரலா இவ்விரும் விடுதலையடைவார்களா? கயவனுன சகுனிக்குப் பாவத்தின் கூலிவாய் வாய்க்கும் சமயமும் வருமா?'' என்று பல எண்ணங்கள் மாறி மாறி யெழுந்துகொண்டிருந்தன.

---

## அதிகாரம் 17: வில்லேருழவன்

வங்க தேசத்தைக் கைப்பற்றிய அக்பர்ஷா மொகலாய சேனுதிபதிகளை யங்கங்கு நியமித்திருந்தனர். இச்சேனுதிபதிகளில் முதன்மை வாய்ந்த ஹுமாயூன், தர்க்கூன், மாசுமி என்போர் தாங்களே வங்காளத்தின் மன்னராகும் பேராசையினுல், அக்பர் சக்கரவர்த்திக்கு விரோதமாய்ச் சேனைகளைத் திரட்டிக்கொண்டு பல கலகங்கள் நிகழ்த்தினர். இக்கலகங்களை யடக்கி, அத்துரோகிகளை வென்று வருவதற்கென்றே இராஜா தோடர்மாலை டில்லி மன்னர் மூன்றும் முறையாக வங்காளத்துக்கு அனுப்பியிருந்தார். தோடர்மால் முங்கேரிக் கோட்டையில் வந்து தங்கியிருந்தார்.

பாகல்புரத்தில் மொகலாயக் கொள்ளைக்கூட்டத்தார் மாசுமி என்பவனது தலைமையின் கீழ் வசித்து வந்தனர். இவர்கள் முங்கேரியைப் பிடித்துத் தோடர்மாலைச் சிறைசெய்ய முயன்றுவந்தனர். ஒருநாள் பகலவன் உதித்தது முதல் அத்தமிக்கும்வரையில் தோடர்மாலுடைய துர்க்கத்திற் பிரவேசிக்க அக்கொள்ளைக்காரர்கள் முயான்று பொருதனர். அவர்களுடைய முயற்சி யொன்றும் பலிக்கவில்லை. தமது உற்சாகம், புத்தியின் பலம், போர்த் திறம் இவற்ருல் ஒவ்வொரு தடவையிலும் அவர் ஒன்ன

லரைப் புறங்கண்டனர். இன்று நடந்த போரில் இந்திரநாதன் காட்டிய நிகரற்ற திறமை, நண்ணலரை நடுங்கச்செய்த வீரம், உழைப்பு இவற்றைக் கண்டு அவர்களுக்குண்டான மகிழ்விற்கோர் வரையறையில்லை. சூரியன் மறைந்து இருள் மூடியதும், விரவலர் வீரியமிழந்து வெருண்டோடினர்.

இவ்வாறாகப் போர் முடிந்த பிறகு, இந்திரநாதன் சேனைத் தலைவரைப் பார்க்கவந்தான். அப்பொழுது இளைப்பாறிக்கொண்டிருந்த தோடர்மால் அவனை யழைத்துத் தம்மருகில் உட்காருவித்து மிகப் பிரியமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்.

"இந்திரநாத்! உமது முழுப் பராக்கிரமத்தையும் காணும் சமயம் இன்று வாய்த்தது. இன்றைத் தினம் எவ்வளவு ஆனந்தமானது! இன்று நாம் அடையலரை அபஜயமடையச் செய்த செய்தியைக் கேட்டு டில்லீசுவரர் அளவற்ற மகிழ்ச்சியடைவார். உவகை மிக்க இத்தருணத்திலும் ஒரு துக்ககரமான செய்தி என் நினைவிற்கு வருகிறது. இதே மாதத்தில், இதே தினத்தில்தான் எனது நண்பரொருவர் சிலரது வஞ்சகச் சூழ்ச்சியால் தம்முயிரை யிழந்தார். அக் கொடிய செயல நடைபெற்று ஆறு வருடங்களாகின்றன" என்றிவ்வாறு நெடுநேரம் பேசியிருந்து, பின் "நல்லது; இன்றைக்கு அதிக நேரமாகிவிட்டது; போய்வருக" என்று விடை கொடுத்துவிட்டுத் தோடர்மால் உள்ளே சென்றார்.

தோடர்மாலின் விடுதியிலிருந்து புறப்பட்ட இந்திரநாதன் தன் கூடாரத்திற்கு வந்தான். 'ஆறு

ஆண்டுகள்,' 'வஞ்சனை; சூழ்ச்சி' என்ற வார்த்தைகள் அவன் மனத்தில் உறுத்திக்கொண்டிருந்தன. இதனைச் சிந்தித்துக்கொண்டே இருந்தமையால், அன்று நெடுநேரம் வரையில் அவன் கண்ணயரவில்லை.

---

## அதிகாரம் 18 : படை வகுப்பு

கலகக்காரர்கள் இப்போது மூங்கேருக்கருகிலுள்ள பாகல்பூரில் பாசறையமைத்துத் தங்கியிருந்தனர். தோடர்மால் தமது நிகரற்ற யுத்த சாமர்த்தியத்தால் அவர்களை வென்று, துர்க்கத்தைக் காத்துக்கொண்டிருந்தார். இந்திரநாதனும் நாளுக்கு நாள் புகழ்பெற்றுவந்தான்.

ஒரு நாள் ஆதவன் அத்தமிக்கும் தருணம், எதிலரின் இருக்கையை யறிந்துவரும்பொருட்டு, இராஜா தோடர்மால் துர்க்கத்தின் வெளியில் வந்து சுமார் அரை மைல் தூரம் சென்றனர். விரவலர் தங்கிய பாடி வெகு தூரத்திலிருந்தது; அன்று அவர் மாறுவேடம் பூண்டு புறப்பட்டார். கூட ஐம்பது குதிரை வீரர்களுமிருந்தனர். சிப்பாய்கள் குதிரைகளை இங்குமங்கும் சிதறவிட்டுக்கொண்டே பின்தொடர்ந்தனர்.

இதற்குள் தொலைவிலிருந்து ஏதோ சத்தம் கேட்டது. எல்லோரும் திகைப்புற்றுப் பார்க்கலானார்கள். அப்பொழுது வெகு தூரத்தில் புழுதி கிளம்புவதைக் கண்டனர். சிறிது நேரத்தில் குதிரைச் சிப்பாய் ஒருவன் வாயுவேகத்துடன்

இராஜா தோடர்மாலுக்கெதிரில் வருவது தோன்றி யது ஒரு கணப்பொழுதில் அந்தச் சிப்பாய் அரு கில் வந்து சேர்ந்தான். அவன் தமது படையைச் சார்ந்தவனென்று அவர்கள் அறிந்தனர்.

"மகராஜ்! மோசம், மோசம்! தாங்கள் இன்று இச்சமயத்தில் வெளிவரப்போகிறீர்களென்பது எப்படியோ பகைவருக்குத் தெரிந்தது. அவர்க ளுடைய இரண்டாயிரம் சைன்யமும், அதோ— பாருங்கள்— அவர்கள் நம்மீது படையெடுத்து வருவதை" என்றனன். இதனைச் செவியுற்றதும் தோடர்மாலுடனிருந்த சிப்பாய்களெல்லோரும் பயந்துவிட்டனர். அவர் படைஞர்களுக்குத் தைரியம் உண்டாக்கி, "இப்படி யேன் பயப்படுகிறீர்கள்? துர்க்கத்தை நோக்கிச் செல்லுங்கள். தெரியலர் வந்து சேருவதற்கு முன்பே நாம் துர்க்கம் புக முடியும்" என்றனர். இவ்வுத்தரவைக் கேட்டதும், எல்லோருடைய குதிரைகளும் துர்க்கத்தை நாடிப் பறக்கலாயின. பேரறிவாளனாகிய இந்திரநாதன், தூரத்தில் எழும் தூசியைக் கண்டு, போர்ப் பறை முழக்கலானான். அவனுடைய முக்கியமான ஐந் நூறு வீரர்கள் தயாராய்த் துர்க்கத்திற்கு வெளியி லிருக்கும் மாந்தோப்பில் வந்து நின்றுகொண்டிருந் தனர். அவர்களை யழைத்துக்கொண்டு அவன் தோடர்மாலை வந்தடைந்து, "மகராஜ்! என் னுடைய இந்தச் சேனையைக்கொண்டு முன்னணி யில் நின்று சற்று நேரம் சத்துருக்களை மறைத்துக் கொண்டிருப்பேன். அதற்குள் தாங்கள் சுலப மாய்த் துர்க்கத்தில் புகுந்துவிடலாம்" என்று சொன்னான்.

எல்லோரும் துர்க்கத்தினருகில் வந்துசேர்ந்தனர். துர்க்கத்தைச் சுற்றியிருக்கும் அகழியைத் தாண்டுவது தான் குறை. அதனருகில் வந்து பார்க்க, அதன் மரப்பாலத்தை யாரோ சிதைத்து விட்டதைக் கண்டனர். எந்த ஒற்றன் பகைஞருக்கு இச்செய்தியை அறிவித்தானோ, அவனுடைய செயலே யிதுவும். உட்புக முற்றிலும் வழியில்லாமற் போயிற்று. அகழியில் நீந்திப் போகவேண்டுமென அவர்கள் ஆலோசித்துத் தீர்மானித்தனர். பின்தொடர்ந்து வரும் பகைவர் படையைச் சுட்டிக் காட்டித் தோடர்மால், "நீங்கள் பாதி அகழ் கடந்து போவதற்குள் அடையலர் அணுகுவர். பிறகு நீங்கள் தண்ணீரில் மூழ்கிச் சாவீர்கள் என்பதை உறுதியாய் நம்புங்கள். இதைவிட வீரனுடைய செயலைச் செய்யுங்கள். சத்துருவுக்கு முகத்தைக் கொடுங்கள். சிலர் இவ்விடத்திற் புதிய பாலம் கட்டத் தொடங்குங்கள். பாலங் கட்டி முடிகிறவரையில், சத்துருவுடன் ஊக்கமாய்ப் போர் புரிந்துகொண்டிருப்போம். தண்ணீரில் மூழ்கி பிறப்பதினும், போர்க்களத்தில் வீழ்ந்திறப்பது மேல். இந்திரநாத்! இன்றைக்குப் போர்புரியுந் துணிவு உம்மைச் சார்ந்தது" என்று சொன்னர்.

"இவ்வெளியோருக்கோ நான் பின்வாங்குவேன்" என்று சொல்லி, நூறு நூறு வீரர் ஒவ்வொரு வரிசையாகத் தன் சைனியத்தை ஐந்து வரிசைகளாக்கி, அவைகளை ஒன்றன்பின் ஒன்றாக அரைச்சந்திரன் உருவம்போல் நிற்க வைத்தான். 'முதல்வரிசையி லிருப்பவர்கள் முதலிற் போர் தொடங்கவேண்டும். அவர்கள் களைத்துப்போனல் பின்னுக்கு ஒதுங்கவேண்டியது. பிறகு இரண்டாம்

வரிசையி லிருப்பவர்கள் முற்பட்டுப் போர் புரிய வேண்டியது; அதன் பிறகு மூன்றாம் வரிசையி லுள்ளவர்கள்; அவர்களுக்குப் பிறகு நான்காம் வரிசையினர். இவ்வாறாக ஒவ்வொரு வரிசையி லுள்ளவர்களும் முன்னணியிலுள்ளவர்களுக்கு இளைப்பாற இடங் கொடுக்கவேண்டும்" என்று தனது சைனியத்தை யொழுங்குபடுத்தி இந்திரநாதன் சத்துருக்களை யெதிர்த்தான்.

கடந்த மூன்று நான்கு மாத காலமாய்ச் சத்துருக்கள் முங்கேரியைச் சூழ்ந்துகொண்டிருந்தனர். இன்றுவரையில் பல்முறை சமர் நடந்தது; இன்று இருபக்கத்தாரும் காட்டிய திறமையைப் போல இதற்குமுன் ஒருநாளும் நேரவில்லை. முன்னணியைக் கலைத்துக்கொண்டு அப்புறம் போனால் இராஜா தோடர்மாலைச் சிறைப்படுத்திவிடலா மென்னும் எண்ணத்துடன், கடல் அலைகளைப் போலப் பகைவர் வரிசை வரிசையாக வந்து போர் புரியலானார்கள்; ஆயினும், அணிவகுப்பு ஒன்றும் கலையவில்லை. பகைவர்கள் இன்று மிகவும் உறுதியுடன் போர் புரிந்தனர். இவ்வாறு நெடிது போர் நடந்தது. இதற்குள் பாலத்தின் வேலையும் முடிந்தது.

இராஜா தோடர்மால் பாலத்தைக் கடந்து செல்லும் வரையில், இந்திரநாதன் ஒரே நோக்கமாக அவரைப் பார்த்துக்கொண்டிருந்தான். அத்தருணத்தில் அவன் மார்பில் சத்துருக்களின் அம்பு ஒன்று பாயவே அவன் திடீரெனக் கீழே விழுந்தனன். வீரர்கள் அவனருகில் ஓடிவந்து கணையைப் பிடுங்கி யெடுத்தனர். உதிரத்தால் அவன் உடம்பெல்லாம் நனைந்து, மூர்ச்சை அடைந்திருந்தான்.

இந்திரநாதனுடைய சைனியத்திற் பெரும்பாலோர் வாராவதியைக் கடந்து உட்புகுந்தனர். பகைவர்களுக்குட் சிலர் இந்திரநாதன் கீழே விழுந்ததைக் கண்டு அவன் பக்கல் ஓடிவந்தனர்; அங்கிருந்த வீரர்களை வெளிதிற் கண்டதுண்டமாக்கித் தமது கூடாரத்திற்கு அவனைத் தூக்கிச் சென்றனர். ஊழ்வலி வசத்தால் ஒன்னலர் கைப்பட்டுக் கைதியானான் இந்திரநாதன்.

---

## அதிகாரம் 19: பாசறைச் சிறை

பிரக்ஞையற்ற நிலைமையில் பகைவர்கள் இந்திரநாதனைச் சிறைப்பிடித்துத் தங்கள் பாசறைக்குக் கொண்டுவந்தனர். வெகுநேரம் பொறுத்து இந்திரநாதனுக்குப் பிரக்ஞை வந்தது. அவன் கண்களைத் திறந்து சுற்றுமுற்றும் பார்த்தான். பகையினத்தார் அங்குப் புடை சூழ உட்கார்ந்திருந்தனர். எதிரில் உயரிய தவிசொன்றில் மாசுமி வீற்றிருந்தார். அவரைச் சுற்றிலும் பெரிய பெரிய அமீர்களும், மற்ற உத்தியோகஸ்தர்களும் தத்தம் தகுதிக்கேற்ப உட்கார்ந்திருந்தனர். இராஜா தோடர்மாலின் சேனையிலிருந்து வந்த ஒற்றர் இருவரும் அக்கூட்டத்திற் காணப்பட்டனர்.

இந்திரநாதனுக்குப் பிரக்ஞை வந்ததைக் கண்டு மாசுமி கம்பீரமான குரலுடன், "ஏ-ஹிந்து! நீ தீர புருஷனாய் இருக்கிறாய்; இருந்தும் நீ இராஜத் துரோகம் செய்தனை. இராஜத் துரோகம் செய்பவனுக்குச் சிரச்சேதத்தைத் தவிர வேறு தண்டனையில்லை என்பது உனக்குத் தெரிந்தேயிருக்கும்" என்றார்.

இந்திரநாதன்:— வீரர்கள் ஒருநாளும் மரணத்துக்கு அஞ்சார். உம் இச்சைப்படி எது வேண்டினும் செய்க; நான் இராஜத்துரோகி யல்லன்.

மாசூமி:—தோடர்மாலுடன் சேர்ந்து வங்க தேசத்திய ஜாகீர்தார்களுக்கு விரோதமாய் உடைவாளைக் கையிலெடுப்பது இராஜத்துரோகமல்லவா?

இந்தி:—வங்க தேசத்துப் பாதுஷா, பரத கண்டத்தின் சக்கரவர்த்தி. அவர் பக்கமாய் இராஜத்துரோகிகளான ஜாகீர்தார்களுடன் நான் யுத்தம் புரிந்தேன்.

மாசுமி இந்திரநாதனது நேர்மையைக் கண்டு கொஞ்சமுங் கோபித்துக்கொள்ளவில்லை. அதற்கு மாறாக மகிழ்ச்சியுடனும் பொறுமையுடனும், "போர் வீர! உன்னுடைய துணிவுக்காக உன்னை மன்னிக்கிறேன். வங்க தேசத்திலுள்ள ஜாகீர்தார்களை நீ இராஜத்துரோகிகள் என்று எண்ணுதே. நாங்கள் மொகலாய வமிசத்தில் பிறந்தவர்கள்; எங்களுடைய புய பலத்தால் இத்தேசத்தை ஜயித்திருக்கிறோம். இத்தேசத்தின் உண்மையான அரசர்கள் நாங்களே" என்று பதிலுரைத்தார்.

இந்தி:—நீங்கள் வங்க தேசத்தை ஜயித்தீர்களென்பதை நான் ஒப்புக்கொள்கிறேன்; மன்னுதி மன்னரான அகபர் பாதுஷாவின் பிரதாபத்தால் உங்களுக்கு அந்த வெற்றி கிடைத்ததென்பதை நீங்கள் மறந்துவிடாதீர்கள். அந்த இராஜாதிராஜனுக்கு விரோதமாய்க் கலகஞ்செய்துகொண்டு நீங்கள் இராஜத்துரோகஞ் செய்கிறீர்கள். கடவுளுடைய

திருவுள்ளத்துக்கு மாறாக நடந்து இந்த அழகிய வங்க தேசத்தை நீங்கள் ஏன் உதிரத்தால் நனையச் செய்கிறீர்கள்?

மாசுமி:—வாயை மூடு; உன்னுடைய பிழைப்பும் இறப்பும் என் கையிலிருக்கிறது. எனக்கெதிரில் இப்படித் தடித்த வார்த்தை பேசுகிறாயா? உனக்கு உயிரிற் கருத்தில்லைபோலும்!

"இவனைச் சிறைச்சாலைக்குக் கொண்டு போ" என மாசுமி உத்தரவிட்டனர். உடனே இந்திரநாதன் சிறைக்கோட்டம் சேர்ப்பிக்கப்பட்டான்.

---

## அதிகாரம் 20 : வீர மெல்லியல்

ஒரு சிறு இருட்டறைக்குள் சூரனொருவன் பாயின்மேற் படுத்திருந்தான். சிறைச்சாலையிலிருக்கும் ஒரு சிறு பலகணி வழியாய் இளங்கதிரவனின் அழகிய கிரணங்கள் உள்ளே வந்தன. மிகவும் நுட்பமான கணக்கற்ற பரமாணுக்கள் அக்கிரணங்களில் விளையாடிக்கொண்டும், மேலுங் கீழும் பறந்துகொண்டுமிருந்தன. பாயிற் கிடந்த அந்தச் சூரன் பலகணியினருகில் எதையோ பார்த்துக் கொண்டு கவலையிலாழ்ந்திருந்தான். என்ன கவலை? 'எதிரிகள் தன்னைக் கொன்றுவிடுவார்கள்; தான் இறந்து போக நேரும்' என்றோ?

இந்திரநாதன் மரணத்திற்குப் பயப்படும் பேதை அல்லன். தன்னுடைய மரணத்தால் வேறு சிலருக்கு ஆற்றொணாத் துயரம் உண்டாகுமே என்கிற சிந்தையால், அவனுடைய உள்ளம்

மிகவும் அல்லற்பட்டுக்கொண்டிருந்தது. தளர்ந்த முதுமைப் பருவத்தில் தனது தனிப் புதல்வரின் முடிவைக் கேட்டால், பிதாவாகிய நகேந்திரநாத் அக்கணமே உயிர் துறப்பார். அந்தப் பேதைப் பெண்மணி—தூய அன்பின் பிழம்பு—குடிசையில் வசிக்கும் அநாதையாகிய ஸாரலாவின் கதி என்னவாகும்? ஏழாவது பௌர்ணமிக்குள் திரும்பிப் போய் அவளைப் பார்ப்பதாகத் தான் வாக்குக் கொடுத்திருந்தான். பௌர்ணமி கடந்து போய் விடும்; ஆவலுடன் எதிர்பார்த்துப் பிறகு அப்பெண் மணி கண்களை மூடிவிடுவாள்; தண்ணீரின்றி யுலர்ந்துவிடும் தாமரையின் மொட்டைப்போல அவளுடைய இதயமும் உலர்ந்துபோய்விடும்! இத்தகைய எண்ணங்களால் இந்திரநாதனுடைய தலை சுற்றலாயிற்று. தலையிற் கையை வைத்துக்கொண்டு துக்கம் மேலிட, "எய்ப்பினில் வைப்பாம் இறைவ! விச்சின்றியே விளைவு செய்யும் வித்தக!" என்று இறைவனை வழுத்தினான்.

பகைவர் சூழலில் இந்திரநாதனை யறிந்தவர், அல்லது அவனைப்பற்றிப் பரிதாபப்படுகிறவர் யார் இருக்கப்போகின்றனர்? சிறைச்சாலையைச் சுற்றிலும் கையில் உருவின வாளுடன் காவற்காரர்கள் அல்லும் பகலும் காத்துக்கொண்டிருந்தனர். மாலையில் ஒருவன் ஏதாவது உணவுப் பொருளைப் பேசாமற் கொண்டுவந்து வைப்பான். பிறகு சற்று நேரத்திற்கெல்லாம் ஒரு வேலைக்காரி வாயைத் திறவாமல் வந்து எச்சிற் பற்று எல்லாவற்றையும் எடுத்துச் சுத்தம் பண்ணிவிட்டுப் போவாள். இவ்விருவர்களைத் தவிர வேறு யாரும் அக்காராகிருகத்திற் பிரவேசிக்கப்படாது. இந் நிலைமையிலும்

இந்திரநாதனுடைய மெலிவைக் கண்டு பரிதபிக்கும் ஒருவர் அங்கிருப்பதாகத் தெரிகிறது. தினந்தோறும் எச்சிற்பற்றை யெடுக்க வரும் வேலைக்காரி யொருத்திக்கு மாத்திரம் இந்திரநாதனுடைய நிலையில் மிகமிஞ்சின துயரம் உண்டாயிருந்தது. பகைவர்கள் இந்திரநாதனைக் கொடுமையாய் நடத்தினர். அவனுக்குப் படுக்க பாய்மட்டுந்தானிருந்தது. அந்தத் தயாளுவான வேலைக்காரி, இதைச் சகியாமல் தனது மேலாடையை யெடுத்து அப் பாயின் மேல் விரித்து விட்டுச் செல்வாள்.

இந்திரநாதனுக்கு நாடோறும் மாலை ஒருவேளை தான் உணவளிக்கப்பட்டது. அதுவும் ஆறி உலர்ந்த உணவே. அந்த ஏவலாட்டி தான் பட்டினியிருந்து இந்திரநாதனுக்குப் பத்தியமான பல உணவுப்பொருளைக் கொணர்ந்து கொடுப்பாள். அவனுடைய உடலிலிருக்குங் காயங்களைக் கழுவித் துடைத்துத் தூய்மையான துணியாற் கட்டித் தனக்குத் தெரிந்த இரண்டொரு மருந்துகளை யிடுவாள். அவளுடைய இச்செயல்களால் இந்திரநாதனுடைய மேனி நாளுக்கு நாள் தேறிவந்தது; காயங்களும் ஆறிவந்தன. விஷப் பிரவாகத்தில் ஓர் அமிழ்தின் திவலையை யனைய அந்தப் பணியாட்டியின் கவலையையும் அன்பையுங் கண்டு அவன் வியப்புறுவான். சிறைச்சாலையிற் போதிய ஒளியின்மையால் அவளைச் சரியா யறிந்துகொள்ள அவனால் முடிவதில்லை. எப்பொழுதேனும் பேச முயன்றால் அவள் மெல்ல காவற்காரரைச் சுட்டிக் காட்டுவாள். பாவம்! இந்திரநாதன் மறுபடியும் மௌனமாய்த் துயரில் அயர்ந்து விடுவான்.

அவள் சில பல சமயங்களில் காவற்காரர்களுக்குக் குடிக்க மதுக் கொணர்ந்து கொடுப்பாள். அதனுற் காவற்காரர்களெல்லோரும் அவளிடம் மிகவும் பட்சமாயிருப்பார்கள். சிறைச்சாலையிலுள்ள இரு காவற்காரர்களுக்கும் இன்றிரவு மதுக் கொணர்ந்து கொடுப்பதாக அமமாது உறுதி கூறியிருந்தனன். அவ்வாறே இரவு பத்து மணிககுச் சொல்விளம்பியுடன் அவள் அந்த வந்தாள். காவற்காரர்களுடைய ஆனந்தத்திற்கு ஓர் அளவேயில்லை; வாங்கிப் பருகினர். இரவு பன்னிரண்டு மணி அடிப்பதற்குள் அவர்களிருவரும் மயக்கத்தால் கீழே விழுந்துவிட்டனர். இத் தருணம் பார்த்து வேலையாட்டி சிறைச்சாலைக்குட் புகுந்தாள்.

உள்ளே இந்திரநாதன் பாயின்மேற் படுத்திருந்தான். இன்று அவனது அகன்ற நெற்றி ஒளி வாய்ந்திருந்தது; உதட்டிற் புன்னகை யரும்பியது. இத் துன்பத்திலும் அவன் ஓர் இன்பக் கனவு கண்டு கொண்டிருந்தான். இன்று பௌர்ணமி; போரில் வெற்றிப்பெற்று அவன் உருத்திரபுரத்திற்குச் சென்றிருக்கிறான். வெகுநாட்களுக்குப் பிறகு ஸாரலாவைக் கண்டதினுல் மிகுந்த ஆராமை யடைகிறுன். ஆனந்தக் கண்ணீரால் ஸாரலாவும் அவனது மார்பை நனைத்துக்கொண்டிருக்கிறுள். இந் நிலையில் திடீர் என அவனுடைய துயில் கலைந்தது. தன் படுக்கையினருகில் உண்மையாகவே ஒரு மடவரல் அழுதுகொண்டு நின்றனள். அவன் திடுக்கிட்டு "ஸாரலா" என்று கூப்பிட வாய் எடுத்தான். அயர்வினுல் அப்போது பேச முடியவில்லை. அந்தச் சிறைக் கோட்டத்தின்

எளிய வேலைக்காரி இந்திரநாதனைப் பார்த்து ஓய்வின்றிக் கண்ணீர் சொரிந்து கொண்டிருந்தாள்.

தேக்கந் தேறியதும், அந்த வேலைக்காரியின் தயாளத்தைக் காண அவனுடைய உள்ளம் மிகவும் உருகிவிட்டது. அவன் கண்களினின்றும் அடக்க முடியாத கண்ணீர் பெருகி வழிந்தது. அவன் நடுக்கமுற்ற குரலுடன், "இந்த ஆதரவு அற்ற ஏழையின் துயரில், நீயேன் வீணாகக் கவல்கிருய்?" என்று வினவ, பதில் ஒன்றும் அளிக்க நாவெழாது அவள் மீளவும் அழலானாள்.

"இந்தச் சங்கட காலத்தில் நீ செய்த நன்றி ஞாலத்தினும் மாணப் பெரிது. உனக்குக் கைம்மாறு செய்யத் தற்போது என்னிடத்திலொன்றுமில்லை; சிறைப்பட்டிருக்கிறேன். ஆயினும் என்னுடைய இக் கணையாழியை உனக்களிக்கிறேன். இக் கணையாழி மறையாமல் என் நன்றியறிவை யுன் நினைவுக்குக் கொண்டுவரல்கூடும்" என்று இந்திரநாதன் கூறினான்.

இதன் பிறகும் வெகு நேரம் வரையில் அவ்வணிதை யொன்றும் புகன்றிலள். பிறகு பேசாமற் கையை நீட்டி அவள் அந்தக் கணையாழியைப் பெற்றுத் தன் கழுத்திலிருக்கும் மாலையில் அதை மாட்டிவைத்தாள். சற்று நேரம் பொறுத்துக் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, அவள் "காணத்தலைவரீர்! இவ்வடியேனை மறந்துவிட்டீர் போலும்!" என்று மெல்லென விளம்பினாள்.

அந்தத் தீங்குரலைக் கேட்டதும் இந்திரநாதன் சரேலென்று எழுந்து உட்கார்ந்தான். வனக்கிரா

மத்திற் கருகிலுள்ள மகேசுவர மந்திரத்தில் இக் குரலை அவன் ஒருமுறை கேட்டிருந்தான். அந்தக் குரல் தான் இன்று சிறைச் சாலையிற் கேட்கப்பட்டதும், சதுர்வேஷ்டித தர்ககத்திலின்று படகில் வெளியேறிய அந்த விமலை, மாறுவேடம் பூண்டு பல ஊர்கள் சுற்றித் தனதாருயிர் நண்பனைப் பின் தொடர்ந்து வேலையாட்டி வேடம் பூண்டு, அவனைச் சத்துருக்களிடமிருந்து விடுவிக்கும்பொருட்டு இங்கு வந்திருக்கின்றனள்.

ஆயினும், விமலை நல்லூழற்றவளாயிருந்தனள். அவள், "தாங்கள் நல்கிய இக்கணையாழி தங்களுடைய ஞாபகார்த்தமாகும். இதனையோர் அரிய பொருளாகக் கருதுவேன் எனினும், தங்களுடைய நினைப்பென்னும் வழியிலிருந்து என்னை விலக்கிவிட வேண்டும். ஸாரலா தங்களை யெதிர்பார்க்கிறாள்.

"இனி இதைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்க அவகாசமில்லை; தற்போது நான் வேறொரு விஷயத்தைச் சொல்லவந்தேன். இங்கிருந்து தங்களை விடுவிக்க ஒரு சூழ்ச்சி தேடியிருக்கிறேன். வாயிற் காவலர் மதுபானத்தால் மயக்குற்றுக் கிடக்கின்றனர். தாங்கள் என்னைப் போல் வேடம் பூண்டு, உடனே இங்கிருந்தும் புறப்பட்டுவிடுங்கள். வெளியிற் காவலர் யாரேனுங் கேட்டால், 'பணிப்பெண்!' என்று பதில் சொல்லிவிடுங்கள்" என்றாள்.

விமலாவின் இவ்வார்த்தையைக் கேட்டு வியப்புற்ற இந்திரநாதன் அவளுடைய திறமைக்கும் மதிவன்மைக்கும் அசைவற்றுப் போனான். "தேவீ"

மன்னிக்கவேண்டும். தங்களை இங்குத் தள்ளி என்னை விடுவித்துக்கொள்ளும் இச்சை யெனக் கில்லை" என்றான்.

விமலா:—என்னைப்பற்றிக் கவலாதீர்கள். நான் இங்கிருந்து வெளியேறுமாற்றை முன்னரே சூழ்ந் திருக்கிறேன். வீரர் திலக! இதோ இன்னொரு ஆடையையும் நான் வைத்திருக்கிறேன். நான் இப்போது அணிந்திருக்கும் ஆடையை உங்களுக் களித்து, மற்றொன்றை நான் உடுத்திக்கொள் வேன். சிறைக் காவலர் மயங்கிக் கிடக்கின்றனர். தாங்கள் இவ்வேடத்துடன் பாகல்பூரை விட் டகன்று விடுங்கள். ஒருவரும் சந்தேகங்கொள் ளார். நானும் வைகறைப் பொழுதில் இக்கூட்டத்தி னின்றும் வெளிப்படுவேன்.

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் இந்திரநாத னுடைய கவலையும், நோவும் பறந்தோடிவிட்டன. அவன் வெளிவரும்போது விமலை, "கட்டழக! தங்கள் காதலுக்குப் பாத்திரமான ஸாரலா இப் பொழுது சதுர்வேஷ்டித துர்க்கத்திற் சிறையி லிருக்கிறாள். இது தங்களுக்குத் தெரியாதென்று நினைக்கிறேன். தாங்கள் அவளை விரைவில் விடுதலை செய்க; இன்றேல், அப்புலைமகன் சகுனி அவளைத் தன் சேவக னொருவனுக்குக் கொடுத்து மணம்புரிவிப்பன்—" என்று கூறினாள். இந்திர நாதன் வேலைக்காரி வேடத்துடன் உடனே வெளிக் கிளம்பினான். அன்றே விமலையும் தன் தந்தை யிருக்குமிடத்தை நாடிச் சென்றனள்.

———

## அதிகாரம் 21 :—வீரர் உரை

மேற்கூறிய சம்பவங்கள் நிகழ்ந்த இரண்டு மூன்று தினங்களின்பின், ஒரு நாள் மாலைக்காலத்தில் இராஜா தோடர்மாலும் இந்திரநாதனும் துர்க்கத்தின் முன்புறத்திற் பேசிக்கொண்டே உலாவினர்.

இந்திர :—ஒரு விண்ணப்பம்: நமது படைஞர் தொகை கொஞ்சம்; எதிர்ப் படையின் தொகையோ அதிகம். உடனே பாதுஷாவிற்குச் செய்தியனுப்பிப் பெரும்படையைத் தருவித்துப் பகைவரை ஒழிக்காமல், இன்னும் எத்தனை நாட்களுக்குத்தான் துர்க்கத்திற்குள் உட்கார்ந்திருப்பது?

தோடர்:—இனி அதிக நாட்கள் வேண்டியதில்லை. அதோ பார்! எதிரிலிருந்து ஒரு பல்லக்கு வந்துகொண்டிருக்கிறது. அதில் வரும் அறிஞர் போரின்றியே நமக்கு வெற்றி கிடைக்கும் மார்க்கங்களைத் தேடி முடிவான செய்தி சொல்லுவர்.

இதற்குள் பல்லக்கு அருகில் வந்து சேர்ந்தது. வங்க தேசத்திய திவான் ஸதீச சந்திரன் அதனின்றும் இறங்கினன். திவான் ஸதீச சந்திரனுடன் இராஜா தோடர்மால் நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தார். அவர் ஸதீச சந்திரனை வங்காளத்திலுள்ள முக்கிய இந்து ஜமீன்தார்களிடத்திற்கு அனுப்பியிருந்தனர். ஸதீசன் நல்ல திறமையுடையவன்; சொற் சாதுர்யமுள்ளவன்; பேசத் தொடங்கினல் கல்லுங் கரைந்துவிடும்; அன்றியும், மிகுந்த புத்திமான். அவன் அவ்வெல்லா ஜமீன்தார்களுக்கும் பற்பல காரணங்களைக் காட்டி, "அக்பர்ஷாவிற்கு இந்துக்கள்பால் அதிகப் பிரிய மிருக்கிறது.

இந்துக்களுக்கு அநியாயமாக ஏற்படுத்தப்பட்டிருந்த பல வரிகளையும் நீக்கியிருக்கின்றனர். இந்துக்களின் சாஸ்திரங்களை அவர் பயின்றிருக்கிறார். ஓர் இந்திய மாதையும் மணம் புரிந்திருக்கிறார். இந்துக்களுடைய அநேக பழக்க வழக்கங்களைப் பின்பற்றிவருகிறார். நம்முடைய வங்கதேசத்திலேயே பாருங்கள் ! ஓர் இந்து வீரனையே சேனைதிபதியாகவும், சுபேதாராகவும் நியமித்து இங்கே அனுப்பியிருக்கின்றனர். வெற்றித் திருமகள், நிழலைப்போல் அவ்வீரரைப் பின்பற்றுகிறாள் இதற்கு முன் இரண்டு முறைகளில் அவர் நமது தேசத்தை ஜயித்தார். இம் முறையும் அவர் ஜெயிக்கப் போகிறார். ஒரு முறை அவர் வெற்றியடைந்தாரானால் கலகக்கார ஜமீன்தார்களை நன்றாக அடக்காமல் விடப்போவதில்லை'' என்று நயமும் பயமுங் காட்டி, அவர்கள் ஒவ்வொருவரும் சத்துருக்களின் சார்பைவிட்டு டில்லீசுவரனுடைய சார்பில் வந்து சேரும்படி செய்தான். "இந்த ஜமீன்தார்கள் இனிமேல் கலகக்காரர்களுக்குத் தானிய வகைகள் முதலிய உணவுப் பொருள்களை யனுப்புவதில்லையென உறுதிமொழி கொடுத்துவிட்டனர். இனி கலகக்காரர்களுக்குச் சோறு வில்வாதி லேகியந்தான். ஐந்தாறு தினங்களில் அவர்கள் யுத்தம் புரிவதொழிந்து பாகல்புரத்தை விட்டகன்று நாலாபுறத்திலும் சிதறி ஓடித் திரிந்தலைவார்களென்பதில் தினைத் துணையும் ஐயமில்லை'' என்று அவன் தெரிவித்தனன். மிகு விலைப் பல பொருள்களைப் பரிசில் வழங்கி ஸதீசனை விடைகொடுத்தனுப்பினர் இராஜா தோடர்மால்.

---

## அதிகாரம் 22 : தீவினைப் பலன்

ஒரு நாள் இரவு இரு நாழிகை யிருக்கும். ஸதீச சந்திரன் கங்காநதி யோரத்தில ஒரு ஸுதா மாடத்தில் உலாவிக்கொண்டிருந்தான். இராஜா தோடர்மால் அவனுக்குச் சிறந்த பரிசுகள் அளித்தமையால் அவனுடைய உள்ளம் பெருமையினால் நிரம்பி யிருந்தது. 'பாபத்தின் பிராயச்சித்தத்தை அனுபவிக்க வேண்டிவருமென்று நீ பயந்திருந்தாயே, அந்தப் பாதகத்தை யார் கண்டுபிடித்தனர்? எத்தகைய தண்டனை, எத்தகைய பிராயச்சித்தத்தை யநுஷ்டித்திருக்கிறாய் நீ? தண்டனைக்கு மாறாக இப்பொழுது உனக்குக் கௌரவமும் ஐசுவரியமுமன்றோ வருகின்றன!" என்று சூரியன் மறைந்தது முதல் ஆசையானது அவன் செவியில் இடைவிடாமல் ஓதிக்கொண்டிருந்தது. அந்த சூரியன் மறுநாள் உதயமாவதற்குள், பாவம்! அந்த ஸதீச சந்திரனுடைய ஆசை, கௌரவம், ஐசுவரியம் இவற்றின் பெருமிதங்களெல்லாம் என்ன முடிவுக்கு வருமோ யாரறிவார்?

அப்போது கன்னங்கரேலென்று ஒரு பயங்கரமான உருவம் கையில் உருவின வாளுடன் வேகமாகத் தன்னிடம் ஓடிவருவதைத் தற்செயலாய் ஸதீச சந்திரன் கண்டான். அவ்வுருவத்தைக் கண்டதும் அவன் பயந்து, அங்கிருந்தும் ஓடிப்போக நினைத்துக்கொண்டிருக்கையில் அந்தக் கொலையாளி அரை விநாடியில் அவனருகில் வந்து, தன் கையிலிருக்கும் கூர்மையான கட்டாரியால் அவனைக் குத்தினான். இதற்குள் ஸதீசசந்திரனுடைய வேலைக்காரர்கள் ஓடிவந்து வாளால் அக்கொலையாளியை வீசிக் கீழே வீழ்த்தினர். மரணத் தறுவாயி

விருக்கும் அக்கொலையாளி, "ஸதீச சந்திரா! நான் இன்னும் சற்று நேரந்தான் உயிர்த்திருப்பேன்! தங்களுடைய மரணமும் சமீபித்திருக்கிறது. தாங்கள் தயாராயிருங்கள்" என்று கட்டுத் தடுமாறிக் கொண்டே, "மகாராஜ்! அவன் தான், அவன் தான்! சகுனி! அவன் வேலைதான்; என்னை ஆசை காட்டி மோசஞ் செய்தான். பெண் ஆசையினுல் நான் இந்தக் கோரமான பாவத்தைச் செய்தேன்."

பிறகு அவன் உயிர் உடலைவிட்டகன்றது.

மறுநாட் காலையில் திவான் ஸதீச சந்திரன் மரணத் தருவாயில் இருக்கிறுனென்று இராஜா தோடர்மாலுக்கு அவசரமான செய்தி வந்தது. இந்திரநாதனுடன் தோடர்மால் அவனைப் பார்க்க வந்தனர்.

ஸதீச சந்திரன் படுக்கையிற் கிடக்கிறுன். பெயர்பெற்ற வைத்தியர்கள் பலர் சுற்றிலும் நிற்கின்றனர். அவனுடைய உடம்பிற் பரவிய நஞ்சின் முன் எவ்வித மருந்தும் பயன்படவில்லை. இவ்வாறு நேரவிருந்த காரணங்களை இராஜா தோடர்மால் கேட்டறிந்தனர். இதற்குள் ஸதீசன் மெல்லெனவிழித்து ஆழ்ந்த குரலுடன், "மகராஜ்! நான் ஒரு கொடிய பாதகனுயிருக்கிறேன். என்னை மன்னியுங்கள்."

ஸதீசனுடைய தளர்ந்த குரல் முன்னிலும் மிக மெலிவடைந்து நாவுலர்ந்தது; அவனுல் மேலே பேச முடியவில்லை. அதைக் கண்டு தோடர்மால் பரிவுடன் அவன் வாயிற் கொஞ்சம் பால் விட, உலர்ந்து போன உதடுகள் மீண்டும் ஈரமாயின. அவன் பின்னும் பேசலானுன்: "நானே உண்மையான பாவி;

என்னைவிடவும் ஒரு பாவியிருக்கிறான். மகராஜ்! என் சேவகனான சகுனி. அவன்தான் சமர சிம்மனைக் கொன்றவன். தாங்கள் இதைப்பற்றி விசாரணை செய்யவேண்டும்" என்றான்.

ஸதீசனது மூச்சுத் தடுமாறலாயிற்று. அவனுடைய உயிரொளி உடலை விட்டகலும் சமயம் குறுகிற்று. அவன் மிகவும் மெல்லிய குரலுடன் "என்னுடைய—மகள்—என்—அரு—மை—விம—லா" அதன்பின் வார்த்தை வாய்க்குள்ளேயே நின்றது. அவனுடைய வாக்கு நின்றுவிட்டது.

இவ்வாறு சொல்லி அவன் வாய் மூடுமுன் அடுத்த அறையிலிருந்து ஒரு நங்கையின் கூக்குரல் கேட்டது. அதைக் கேட்டதும் ஒளி மழுங்கிக் கிடந்த ஸதீசனுடைய கண்களில் நீர் ததும்பிற்று. அரை விநாடியில் விமலை ஓடிவந்து தன் தந்தையின் கழுத்தைக் கட்டிக்கொண்டு கோவென்று கதறினாள்.

தன்னைப் பாதகனைச் சிறையினிறும் மீட்ட ரமணி, ஸதீச சந்திரனுடைய மகள் விமலாவென்பது இந்திரநாதனுக்கு இப்பொழுதுதான் தெரிந்தது. விமலை தன் தந்தையின் காலில் தலையை வைத்துக் கதறிக் கதறியழுது புலம்பினாள். விமலாவின் கண்களினொளி யின்று மங்கியது. எங்குப் பார்க்கினும் அவளுக்கு இருள் மயமாய்க் காணப் பட்டது. அவளுடைய உள்ளம் உடைந்துபோய், உலகெங்கும் சூனியமாய்த் தோன்றிற்று.

பரிதாபகரமான அந்நிலையைக் கண்டு இராஜா தோடர்மால் தம் கண்களை யிருகைகளாலும் மூடிக்

கொண்டு, அங்கிருந்தெழுந்து வெளியில் வந்தார். இந்திரநாதன் தன் முகத்தை மூடிக்கொண்டு கதறி அழலானான்.

---

## அதிகாரம் 23 : இடுங்கனும் களைகனும்

இன்று பௌர்ணிமை; எனினும், கார்முகிற் படலத்தால் வானம் மறைந்திருந்தது. அதனால் உலக முழுவதும் பேரிருள் பரவியிருந்தது. சதுர் வேஷ்டித துர்க்கத்தில் ஆகாயத்தில் தோன்றி மறையும் மின்னலைப் பார்த்துக்கொண்டிருந்தனள் ஸாரலா தேவி.

சிறு பருவத்தில் நிகழ்ந்த செய்திகள் ஒவ்வொன்றாய் இப்பொழுது அவளுடைய நினைவிற்கு வந்துகொண்டிருந்தன. அவள், மகாராஜா சமர சிம்மனுடைய ஏக புத்திரி. சில சமயத்தில் தந்தையின் தோளில் நின்றுகொண்டு மரத்திலிருக்கும் மலர்களைக் கொய்வாள். சில சமயத்தில் அன்னையின் மடியினின்றும் எழுந்துபோய், வெளியே பறந்துகொண்டிருக்கும் பட்டுப் பூச்சிகளைப் பிடித்துத் துரத்திக்கொண்டோடுவாள் அவைகள் பறந்தோடி விடும். அப்பொழுது சிறுமி யழுது கொண்டு உட்காருவாள். இன்று அவை யனைத்தும் அவள் நினைவிற்கு வந்தன.

பிறகு, அவளுக்கு உருத்திரபுரத்தின் நினைவு வந்தது. நாடோறும் அவள் அமலையுடன் ஆற்றுக்குப் போவாள். மாலை யந்திப்பொழுதில் அவ்விருவரும் உரையாடிக்கொண்டிருப்பர். இன்று அந்த அமலா எங்கிருக்கின்றனளோ? பட்டுப் பூச்சிகளைப் போலவே பறந்துபோய்விட்டனள்!

பின்னர் அவளுக்கு வனக்கிராமத்து ஆச்சிரமத்தின் நினைவு வந்தது. அந்தத் தன்னுடன் குலவி விளையாடும் பாங்கியர் இப்பொழுது எங்கிருக்கின்றனர்? அவர்களும அப் பட்டுப்பூச்சிகளைப் போலவே பறந்துபோயினர்!

பின், எவனுடைய ஆசையினுல் தான் இன்னும் உயிர்த்திருக்கின்றனளோ, அவனுடைய நினைவு வந்தது. உருசதிபுரத்தில் பௌர்ணிமை யன்றிரவு விடைபெற்றுச் சென்ற அந்த இந்திரநாதன் பிறகு என்னவானுன்? அவனும் அந்தப் பட்டுப் பூச்சிகளைப் போலவே பறந்துபோயினனு?

இவ்வனைத்தும் ஒன்றன்பின் ஞென்ருய்த் தன் னினைவில் எழவே, பெருங்காற்றின் முன் சிறு சுடரென்ன, ஸாரலா மனஞ் சுழன்று அயர்ந்தாள். இதற்குள் மின்னல் ஒளி வீசியது; அதன் பிரகாசத்தில் ஸாரலாவுக்கு என்ன தெரிந்தது? ஒரு மானிட உருவம். நீண்ட கைகள், விசாலமான நெற்றி, வீரனுக்குரிய உடை இவற்றுடன் தோன்றிற்று.

அந்த உருவம், ஸாரலாவுக்கு முன்பு பரிச்சயமுள்ளதாயிருந்தது. ஒரு கணத்திற் கீழே வீழவிருந்த ஸாரலாவின் நடுக்கமுற்ற கோமளமான தேகத்தைச் சடேலென்றெடுத்துத் தாங்கியவன், சேனுதிபதி இந்திரநாதன்.

மறுநாட் காலையில் இந்திரநாதன் தன்னுடன் வந்த சில சிப்பாய்களைக்கொண்டு, இராஜா தோடர்மாலின் கட்டளைப்படி சகுனியின் கைகால்களில்

விலங்கு மாட்டுவித்து, அவனை இச்சாபுரத்திற் கழைத்துச் சென்றான். மகாராஜா சீக்கிரத்திலேயே இச்சாபுரத்தில் நகேந்திரநாதருடைய அரண்மனைக்கு வருவதாகச் செய்தி யனுப்பியிருந்தார். மகாசுவேதா, ஸாரலா, விமலா இம்மூவரும் ஒரு படகிலுட்கார்ந்து புறப்பட்டு இச்சாபுரம் வந்தடைந்தனர். இந்திரநாதன் தன் பிதாவின் சரணத்தில் வணங்கி யெழுந்து அவருடைய கலியைத் தீர்த்தான்.

## அதிகாரம் 24: காதற் சுற்றம்

நெடுநாளைக்குப்பின் இன்று தந்தை, புதல்வன், உறவினர், அனைவரும் சந்திக்க நேர்ந்தமையால் அவர்களுக்குண்டான மகிழ்ச்சிக்கோர் அளவில்லை.

வனக்கிராமத்திலிருந்து சந்திரசேகரர் கேசவாசாரியாருடன் இச்சாபுரத்திற்கு வந்தார். உருத்திரபுரத்திலிருந்து அமலாவும் தன் கணவனுடன் வந்து சேர்ந்தாள். இராஜா தோமர்மால் வரப்போகிறாரென்றும், அவரை நல்வரவேற்க இச்சாபுரம் வருமாறும் அனைவருக்கும் இந்திரநாதன் ஓலையனுப்பியிருந்தான்.

இந்திரநாதன் தான் ஜமீன் குமாரனான சுரேந்திரநாதனென்பது இப்பொழுது யாவருக்குந் தெரிந்தது. இந்திரநாதன் யாரோ ஒரு சாமானியமான காயஸ்தனுடைய புத்திரனென்றெண்ணி உருத்திரபுரத்தில் அமலா அவனுடன் எவ்வளவு பரிகாசமாயும், வேடிக்கையாயும் பேசிக்கொண்டிருப்பாள்!

அதே இந்திரநாதன் ஜமீன்தாருடைய புத்திர னென்றறியவே, அவனெதிரில் நிற்கவும் அவள் கூசினாள். அதனால் இச்சாபுரத்துக்கு வந்த அமலா அந்தப்புரத்திலேயே யிருந்தனள். இதை யறிந்த சுரேந்திரன் திடீரென நவீனதாஸ் இருக்கும் அறைக்கு வந்தான், அமலை இவனைக் கண்டதும் தன் முன்றானையை யிழுத்து முகத்தை மறைத்துக் கொண்டாள்.

இதைக் கண்ட அவன் சிரித்துக்கொண்டே "இன்று நீங்கள் புதிய மனிதர்களாய்விட்டீர்கள்" எனலும், அவள் முன்றானைக் குள்ளிருந்தபடியே "ஜாககிரதையாயிருங்கள்; தெரிந்ததா? தாங்கள் அயல் மாது ஒருத்தியுடன் யதேச்சையாகப் பேசுகிறது நல்லதன்று. இதை நான் ஸாரலாவினிடம் சொல்லாமல் விடேன்" என்றனள்.

"அடடா! அமலாதேவி இப்படிப் பேசலாமா? இதற்குள் நான் அன்னியனாகிவிட்டேனா? நான் யாரை உறவினரெனக் கருதினேனோ, அவர்கள் இன்று என்னை அந்நியரெனக கருதினதும் எனது துரதிர்ஷ்டந்தான்" என்றான் சுரேந்திரநாதன்.

இந்த மறுமொழியைக் கேட்டு அமலா வெட்க மடைந்து மூடியிருந்த முந்தாட்டை விலக்கிக் கொண்டு, "நீங்கள் உருத்திரபுரத்தில் இப்படி யொன்றும் பேசினதில்லையோ; இதற்குள் அவள் இவ்வளவு சொல்லிக் கொடுத்துவிட்டனளா?" என்று கூறச் சுரேந்திரநாதன் நகைத்துக் கொண்டே அப்புறம் சென்றான்.

மகாசுவேதா, சமர சிம்மருடைய இராணி யெனத் தெரிந்து மாந்தரனைவரும் மட்டிலா மகிழ்வுற்றனர். இராஜா தோடர்மாலின் உத்தரவின் படி, அவள் தன் கணவரது ஜாகீருக்குப் பழையபடி எசமானியாக இருக்கிறாள்.



இந்திரநாதன்

இவ்வாறு தன்னால் அன்பு செலுத்தப்பட்டவரனைவரும் மகிழ்வுறு நிலை யெய்தினமை கண்டு, இவ்வுலகப் பற்றைத் துறந்த விமலைக்கும் மனம் சற்று அமைதியாயிருந்தது. ஸாரலா தன் பிதாவின் ஜாகீருக்கு எசமானியானாள்; சகுனி சிறையி

லடைக்கப்பட்டான். இதனாலும் விமலாவின் மனத் துயரம் ஓரளவு குறைந்தது. நாளுக்கு நாள் அவள் தன் துயரைச் சிறிது சிறிதாக மறக்கலானாள்.

இச்சாபுரத்தில் இராஜா கோடர்மாலை வர வேற்கும் கொண்டாட்டம் வெகு ஆடம்பரமாக விருந்தது.

---

## அதிகாரம் 25: சகுனியின் விசாரணை

இந்து ஜமீன்தார்களின் உதவியால் மொக லாயக் கலகக்காரர்களையும், கொள்ளைக் கூட்டத் தினரையும் தலைகாட்டா வண்ணம் ஓட்டி, வங்க தேசத்தில் சமாதானத்தை நிலைநாட்டி, அரசர் பெருமானுக்கு வாகை சூட்டி, இராஜா தோடர் மால் குறித்த காலத்தில் இச்சாபுரம் வந்தடைந் தனர்.

இராஜாவின் தர்பாருக்காக அகன்ற வெளி யில் அமைக்கப்பட்ட ஒரு பெரிய கொட்டகை விலை யுயர்ந்த பட்டுத் துணியால் விதானித்து நன்று யலங்கரிக்கப்பட்டிருந்தது. பாரசீக தேசத்து இரத் தினக் கம்பளங்கள் தரையில் விரிக்கப்பட்டிருந்தன. நடுவில் ஓர் உயரிய அரியணை யிடப்பட்டிருந்தது. இந்தத் தவிசின் நாற்புறமும் தத்தம் தகுதிப்படி சபையினர் வீற்றிருந்தனர்.

கொட்டகையின் முன்புறத்தில் ஆயுதங்கள் தரித்த சேனை நின்றுகொண்டிருந்தது. முதலில் காலாட் படைகளின் வரிசை நிற்க, அதற்குப் பின் புறத்தில் குதிரை வீரர்கள் உருவிய வாளுடன்

நின்றுகொண்டிருந்தனர். இராஜா தோடர்மால் வரும் வாயில் வழியில் ஊதா வெல்வெட் விரிக்கப் பட்டிருந்தது.

சூரியோதமாகிச் சுமார் ஐந்து நாழிகை யளவில் இராஜா தோடர்மால் தர்பார் மேடை வந்தெய்தினர். அவர் கொட்டகையின் வாயிலிற் புகுந்ததும் தர்பாரிலிருந்தவர்களனைவரும் எழுந்து கை தட்டுதல் செய்து, "திவான் அவர்களுக்கு வெற்றியுண்டாகக் கடவது. அக்பர் பாதுஷா நீடூழி வாழ்க!" என்று வாழ்த்துக் கூறினர்.

மகாராஜா சாந்தமாய் மலர்ந்த முகத்துடன் அரியாதனத்தில் வீற்றிருந்தார்.

அப்பொழுது மறுபடியும் ஜயகோஷமும் கரகோஷமும் எழும்பின. போர் வாத்தியங்கள் முழங்கின. வங்க தேசத்தில் எங்கெங்கு, எவ்வியித்தகு பொருள்களுண்டோ அவையனைத்தும் அரசர் பார்வைக்கென்று அங்குக் கொண்டுவரப்பட்டிருந்தன. பெயர் பெற்ற சங்கீத வித்துவான்கள், நிருத்த மாதர், ஜால வித்தைக்காரர்கள், விகடர்கள் ஆகிய இவர்கள் தங்கள் பல்வேறு திறமையையும் புலப்படுத்திச் சபையை மகிழ்வித்தனர். மல்லர்கள் தமது வன்மையைக் காட்டியும், வில் வீரர் தமது வின்மையை வெளிப்படுத்தியும் சபையை மகிழ்வுறுத்தினர். கருவிலே திருவுடைய நல்லிசைப் புலவர்கள் அரசர் வென்ற போரினைப்பற்றிப் பரணி பாடி, வீர ரசத்தால் அனைவோருடைய

உள்ளத்தையும் நிரப்பினர். இவ்வாறு பலவிதக் காலட்சேபங்களோடு முற்பகற் சபை கலைந்தது.

பிற்பகலில் மறுபடியும் சபை கூடிற்று. இராஜா தோடர்மால், "இனி நம்முடைய முக்கிய மான காரியத்தை நாடுவோம். அந்தக் கைதியை எதிரிற் கொணர்மின்" என்று உத்திரவிட, விலங்கைத் தறித்துச் சகுனியைக் காவலர் அவையின் முன் நிறுத்தினர். அப்பொழுது சுரேந்திரநாதன் மகாராஜாவின்முன் எழுந்து நின்று கடுமையான குரலுடன், "மகாராஜ்! மகா வீரராகிய சமர சிம்மருடைய ஆதரவற்ற விதவை, அநாதையான மகள் இவ்விருவர் பக்கமாய் இந்தக் கைதியின்மீது பின் வருமாறு குற்றத்தைச் சாட்டுகிறேன். இந்தக் கீழ்மகன் இராஜா சமரசிம்மருக்கு விரோதமாய்ப் பொய்ப் பத்திரங்களையும், கடிதங்களையும் சித்தம் செய்து அவரைக் கொலைபுரிவித்தான். அது போலவே, திவான் ஸதீச சந்திரருடைய மகளின் பக்கமாக நான் சொல்வதென்னவெனில், இவன் ஸதீச சந்திரரையும் கொலைசெய்வித்தவன்" என்று வணக்கத்துடன் நவின்றான்.

சகுனியின் மீது சாற்றப்பட்ட குற்றத்தை நிறுவப் பல ஆதாரங்கள் கிடைத்தன. அவனுடைய பொய்க் கடிதங்கள் இராஜா தோடர்மாலின் வசமிருந்தன. அவர் அவற்றைப் பன்முறை சபையினருக்குப் படித்துக் காட்டினர். அக் கடிதங்களெல்லாம் சகுனியின் கைப்பட எழுதியனவாயிருந்தன. திவான் ஸதீச சந்திரருடைய கொலை

யைப் பற்றி இராஜா தோடர்மால் நேராகவே தெரிந்திருந்தார்.

அவர் சிங்கத்தைப்போலக் கர்ச்சனை செய்து, "கொடியோய்! நீ கொலைத் தண்டனைக் குட்படு கிறாய். யாதேனும் சொல்லிக்கொள்வன உளவேல் விரைவிற் கூறு" என்றனர்.

சகுனி (அஞ்சாத நெஞ்சனாகி) :—மகராஜ்! நான் தற்போது தங்களைச் சரண்புகுன்றேன். தாங்கள் நீதிநூலுணர்ந்த மேலோராயிருக்கிறீர் கள். தங்களைச் சரண்புக்க என்னைக் காப்பது தங்கள் கடன். என்னை வதைத்தால் சாசுவதமான அபகீர்த்தியைத் தான் தேடிக்கொள்வீர்கள். இதைப் பற்றி யோசியுங்கள்.

சகுனியினுடைய பேச்சைக்கேட்டு இராஜா தோடர்மால் சற்று நிதானித்தார்.

சற்று நேரத்தில் காதிக்கான் என்னும் சர்தார், "மகராஜ்! தங்கள் கடமையைச் செய்யத் தவறுகிறீர்கள். குற்றவாளிக்குத் தக்க தண்டனை விதிப்பதுதான் நீதி" என்றார்.

சுரேந்திரநாதன், "சதீச சந்திரர் மரணத்தறு வாயில் தெரிவித்துக்கொண்ட விண்ணப்பத்தையும் மறந்திருக்கமாட்டீர்கள்" என்றான்.

தர்பாரிலிருந்த முதியோர், "மகராஜ்! தீயோரை ஒறுத்தலும், நல்லோரைக் காத்தலுமே இராஜ தருமமாகும். இந்த மக்கட் பதடியைத் தாங்கள் சிட்சிக்கத்தான் வேண்டும்" என்றனர்.

அதற்குள் மண்டபத்திற்கு வெளியில் சிறிது தூரத்தில் ஏதோ ஒரு பெரிய அரவம் கேட்டது. அனைவரும் அஃதென்னவெனக் கவனிக்கலாயினர். கன்னங்கரேலென்று உயர்ந்து இளைத்த ஒரு பெண்மகள், அழுக்கடைந்த ஆடையுடன் மண்டபத்திற்குள் ஓடி வந்து, கீச்சென்று ஒரு பெரிய கூச்சலிட்டுத் தொப்பென்று கீழே விழுந்தாள். அவள் தான் அந்தப் பைத்தியக்காரி விசுவேசுவரி.

சகுனி இதுவரையில் நிலையான சித்தத்துடனிருந்தான்; அந்தப் பைத்தியக்காரியைக் கண்டதும் அவனுடைய அடிவயிற்றில் இடி விழுந்தது போலாயிற்று. சற்று நேரத்தில் அப் பையித்தியக்காரி யெழுந்து நின்று, "மகராஜ்! இச் சண்டாளன் என் அன்னையைக் கொன்ருன். நான் தங்களிடம் சில உண்மைகளைத் தெரிவிக்கும்பொருட்டு வந்திருக்கிறேன்" என்று தன் வரலாற்றைத் தெரிவித்தாள்.

அஃதாவது: விதவையான அவளது அன்னை வேருேர் ஆடவனுக்குப் பெற்ற மக்கள் சகுனியும், விசவேசுவரியும். சகுனியை மாந்தரனைவரும் கோளகன் என்று இகழ்வார்கள். அதனுல் அவனுக்கு அடங்காக் கோபமுண்டாகும். அந்தக் கோபத்தினுல் அவன் தன்னைப்பெற்ற அன்னையையடிக்கவும் பின்வாங்கான். ஒரு நாள் அவனிழைத்த இன்னலைத் தாங்கலாற்ருது அவள் உயிர் துறந்தாள். அவள் இறந்த பயத்தினுல் விசுவேசுவரிக்கு மூளை கலங்கிவிட்டது. அவள் பல ஊர்களிலும் சுற்றித் திரிவாளாயினுள். சகுனி, தான் திக்கற்றவ

னென்று சொல்லிக்கொண்டு கடைசியில் ஸதீச சந்திரருடைய வீட்டிற்கு வந்து வசிக்கலானன்.

விசுவேசுவரி விளம்பிய மாற்றத்தாற் சகுனி யின் வரலாற்றை யனைவரும் உணரலாயினர்.

இனி உயிர் தப்பும் வழியில்லை யென்பதைச் சகுனி யுணர்ந்து, தனக்குப் பாதுகாவலாகப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த சேவகன் கைப் பற்றியிருந்த வாளைத் திடீரென்று பிடுங்கித் தன் மார்பிற் குத்திக்கொண்டு, வெட்டுண்ட பெருமரம் போல் மேதினியில் வீழ்ந்து உயிர் துறந்தான்.

---

## அதிகாரம் 26 :— கணையாழி

சின்னாட்களுக்குப் பிறகு இராஜா தோடர் மால் முங்கேரிக்குச் சென்றார். தமது ஜாகீரின் முழுப் பாரத்தையும் இனிப் புதல்வன் ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று நகேந்திரநாதர், சுரேந்திரநாதனைச் சிம்மாசனம் ஏற்றினர். சுரேந் திரநாதனுக்கும் ஸாரலாவிற்கும் மிக்க சிறப்புடன் திருமணப் பெருவிழா நடைபெற்றது. இச்சாபுரம், சதுர்வேஷ்டித துர்க்கம் என்னும் இரு ஜமீன்களை யும் சுரேந்திரநாதன் ஒரு குடைக்கீழ் ஆண்டான்.

தன்னுடைய பழைய நண்பரான நவீன தாஸரைச் சுரேந்திரநாதன் தனக்குத் திவானுக வைத்துக்கொண்டான். பைத்தியக்காரியான விசுவேசுவரிகூறிய சோதிடம் பலித்தது; அமலா திவானின் மனைவியே யாயினள்.

பதியின் வதைக்குப் பழிதீர்த்துக்கொண்ட மகாசுவேதை இப்பொழுது மனவமைதியுடைய வளாய் இருந்தாள்.

தூய உள்ளமும், அறவழிச் சார்பும், உருவழகு முடைய விமலா என்னவாயினள்? என்று தன் தந்தை இறந்தனரோ, அன்றே அவளுடைய உள்ள மும் சூனியமடைந்தது. விரிச்சென்று உலக முழுவ தும் இருள் சூழ்ந்து காணப்பட்டது. அன்று முதல் அவளுக்கு எதிர்கால வாழ்க்கையின் மனோவிருத்தி முற்றிலும் ஓய்ந்தது. அவள் மனத்தில் இன்பம் பற்றிய ஒரு பயமுமிருக்கவில்லை.

தனது ஆருயிர்த் தோழி ஸாரலாவின் விவாகம் முடிந்ததும், விமலா வனக்கிராமத்தினருகிலிருக்கும் மகேசுவர மந்திரத்திற்குப் போய் வசிக்கலானாள். அவள் சதுர்வேஷ்டித துர்க்கத்திலேயே வசிக்க வேண்டுமென்று சுரேந்திரநாதன் வற்புறுத்தி வேண்டிக்கொண்டான். ஸாரலாவும் விமலையின் கரகமலத்தைப் பற்றிக்கொண்டு தன் இனிய மொழி களால் மிகவும் வேண்டிக்கொண்டனள். அவ ளுடைய மனதைத் திருப்பும் பொருட்டுப் பலவாறு முயன்றும் பயன்படவில்லை. விமலா, "இறைவன் எனக்கு அமைத்த வழியில் நான் ஒழுகக்கடவேன். அந் நியதியை மீற எவராலும் முடியாது. நீங்கள் நன்கு இல்லறத்தை நடத்தி வருகிறீர்கள் என்பதைக்கேட்டு மகிழ்வதே எனக்குப் போதும்" என்று மன்றாடி விடைபெற்றாள்.

மகேசுவரமந்திரம் வந்த விமலை பிக்குணிக் கோலம் பூண்டு, இறைவனை யுபாசித்துவந்தாள்.

மகந்து சந்திரசேகரர் இந்தப் புண்ணியவதியை 'மாயி' (அன்னாய்) என்றழைப்பர். அவர் தமது ஆச்சிரமத்தில் வசித்துவரும் பெண்பாலரிற் சிலரை விமலா தேவிக்குப் பணிப்பெண்களாகவும், சிலரை பாங்கியராகவும் நியமித்திருந்தார். இவ்வாறாகச் சில மாதங்கள் கடந்துபோயின.

ஒரு நாள் ஸாரலா விமலாவைக் காணும் பொருட்டு மகேசுவரமந்திரம் வந்தாள். அங்குப் பிக்குணிக் கோலம் பூண்டிருந்த விமலையை யணுகி, அவளது கையைப் பரிவுடன் பற்றிக்கொண்டு விம்மி விம்மி அழலானாள். விமலாவுக்கும் துக்கம் மேலிட்டது. ஸாரலா, "நாங்கள் பெரியதோரின்ன லுற்ற தருணத்தில் ஒரு தெய்வம்போல் வந்து பேருதவி புரிந்தீர்கள். அதற்கு யாங்கள் செய்யும் கைம் மாறும் உளதோ?" என்று கூறினள்.

விமலை சாந்தமான நயனத்தையும், வதனத் தையுமுடையவளாய்ப் புன்சிரிப்புடன், "ஸாரலா! என்னைப்பற்றி யுயர்த்திப் பேசுவது உன் இயல்பே. நிற்க, மாலை வேளையாயிற்று. உன்னிடம் ஒரு செய்தி தெரிவிக்கவேண்டும். நீ முன்போல எளியை யல்லை. மன்னன் மனைவி யாயினை. இனி யொருகால் என்னை மறக்க நேரினும் நேரும். என்றும் மறவாம லிருத்தற் பொருட்டு ஒன்று செய்ய நினைக்கிறேன். என்னிடம் ஓரரிய பொருள் உண்டு. அதை யென் உயிரினும் பெரிதாகப் போற்றி வருகின்றேன். இப்பொழுது அதை உனக்குத் தருகின்றேன். மறுக்காது ஏற்றுக்கொள்!" என்று சொல்லி, தன் கழுத்திலிருக்கும் மாலையிலிருந்து ஒரு பொற்



விமலாவும் ஸாரலாவும்

கணையாழியை யெடுத்து, அதை ஸாரலாவின் விரலில் இட்டனள். அதைக்கண்டு ஸாரலா வியப்புற்று, "இஃதென்ன பொற்கணையாழி; இதைப் பெற நான் உடன்படேன்! இஃது உன் தந்தையினது. இது உன் கையிலேயே இருக்கத்தக்கது" என்றாள். விமலா, "ஸாரலா! இஃது என் தந்தையின் கணையாழி அன்று. இதிலுள்ள எழுத்துக்கள் யாரைக் குறிப்பன? நன்றாகப் பார். இதன் உரிமை முற்றிலும் உனக்கே. இறைவன் அருளால் அவ்வரிய பேறு உனக்கே கிடைத்திருக்கிறது. ஆயுள் பரியந்தம் நீ இக்கணையாழியை அணிந்துகொள். இறைவன் உங்களிருவரையும் நல்வாழ்வில் வைப்பாராக! உங்கள் நாடு செழிப்புற்றுப் பல்வளமும் கொழிப்ப

தாருக! மாந்தர் தம்முட் பகைமை நீங்கி யொற்றுமை யாய் வாழ்ந்து உடலுரமும் மனத்திட்பமும் பெற்று வாழ்வாராக!'' என்று ஆசிர்வதித்தனள். பின்பு ஸாரலா, அக்கணையாழியின் முகப்பில் தன் கணவர் சுரேந்திரநாதரது பெயர் அடையாளம் பொறிக்கப் பட்டிருந்ததைக் கண்ணுற்று வியப்படைந்தாள். பாசறைச் சிறையில் இந்திரநாதனால் அக்கணையாழி விமலைக்கு அளிக்கப்பட்டது என்பது தெரியவந்தது. விமலையின் தன்னலங் கருதாத் தன்மையை ஸாரலா உணர்ந்தனள். பின்பு ஸாரலாவுக்கு விடை கொடுத்தனுப்பிவிட்டு, விமலை இறைவனை உபாசித்துக்கொண்டு, தூயநெறியில் தன் காலத்தைக் கழித்து வருவாளாயினள்.

---

# அரும்பதவுரை

பக்கம்

i தோற்றுவாய் - முகவுரை, பாயிரம்

ii மங்கலில் - கெடுதலில்லாத; முடியுடை - கிரீடத்தை யுடைய
முடியின் - இறந்தால்

iii கோன் முறை - அரசியல் முறை
சூடாமணி - தலையிற் சூட்டிக்கொள்ளும் ஓர் இரத்தினம்

iv புறக்கணித்து - அலட்சியம் செய்து
அமர்க்களம் - போர்க்களம்

1 பகலவன் - சூரியன்
நள்ளிரவு - இருள் செறிந்த நடு இரவு [று
கமழ்ந்தது-வாசனை வீசிற்
விண்ணிடை - ஆகாயத்தில்
காசினி - பூமி
அந்தகாரம் - இருள்
திகழ்ந்தன - விளங்கின
துகில் - ஆடை

2 தெரிவைப் பருவம் - 25-வது முதல் 31-வது வயது வரையிலுள்ள காலம்.

பக்கம்

3 கைம்மை - விதவை
அணங்கு - பெண்
பிரசண்ட மாருதம் - பெருங் காற்று
தினை-ஒரு சிறிய தானியம்

4 துணை - அளவு

5 கமலம் - தாமரைப் பூ
அரும்பெறல் மணி-பெறுதற்கரிய இரத்தினம்
நான்முகன் - பிரமன்
பெதும்பையர்-பதினொரு வயதுப் பெண்கள்
விழிதுயின்றாள் - நித்திரை செய்தாள்
அடுக்களை - சமயலறை

6 தூய்மை - சுத்தம்
வைகறையில் - விடியற் காலத்தில்
புள்ளினங்கள் - பட்சி வகைகள்
துயிலுணர்தல் - விழித்தல்

7 குற்றேவல் மகளிர் - வேலைக்காரிகள்

9 மணாட்டி - மனைவி, மணமகள்
இல்லம் - வீடு

10 மணியம் - வேலை

பக்கம்
11 கடிமணம் - கல்யாணம்
முகிற்குழாம் - மேகக்கூட்டம்
12 பாவையர், தையலர், அரிவையர், மடந்தையர், வணிதையர், தெரிவையர், பேரிளம்பெண்டிர்-பெண் மக்களைக் குறிக்கும் சொற்கள்
13 அசதியாடுதல்-பரிகசித்தல்
14 கொழுநர் - கணவர்
16 இவுளிமறவர்-குதிரைவீரர்
அணிகலன் - ஆபரணம்
அவைக்களம் - சபையிடம்
தாராகணம் - நட்சத்திரக் கூட்டம்
ஆதவன் - சூரியன்
வஞ்சி - பகைமேற் செல்வோர் அணியும் பூ மாலை
17 அற்றம் - ஒழிவு
வாகை மாலை - வெற்றி மாலை
கைம்மாறு-பிரதியுபகாரம்
சிகாமணி - முடியில் தரிக்கும் இரத்தினம்
20 ஆற்றொணு - பொறுக்க முடியாத
காரிகை - பெண்
வளி - காற்று
ஞாயிறு - சூரியன்
திங்கள் - சந்திரன்

பக்கம்
21 அபலை - ஸ்திரீ
இல்லக்கிழத்தி - மனைவி
23 வதனம் -முகம்
இரவி - சூரியன்
அரவிந்தம் - தாமரை
24 தண்ணெண்கதிர்-குளிர்ச்சி பொருந்திய கிரணங்கள்
விசும்பு - வானம்
25 உவா - அமாவாசை அல்லது பௌர்ணிமை
26 இறைஞ்சினன் - வணங்கினுன்
27 அஃதை - அனுதை
28 இன்னல் - துன்பம்
29 இளமரக்கா - இளமரங்களையுடைய சோலை
30 அங்கைநெல்லி - உள்ளங்கையில் வைத்த நெல்லிக் கனி
31 தீங்கனி - இனிமையான பழம்
மந்தனமொழி - இரகசிய வார்த்தை
32 மந்திரம் - மாளிகை
34 பலகணி - சன்னல்
பரிசு - அன்பு
ககனத்தை - வானத்தை
சிகை - தலை மயிர்
35 படலம்-அடுக்கான கூட்டம்

பக்கம்

36 அறவுரை - நீதிவார்த்தை
திவான்கானு - திவானு
டைய காரியாலயம்(ஆபீசு)

37 ஓவியங்கள் - சித்திரங்கள்;
படங்கள்
தவிசு - ஆசனம், பீடம்
சுதன்மை - இந்திர சபை
பிராயச்சித்தம்-கழுவாய்,
பரிகாரம்

38 கழிவிரக்கம்-பின் வருந்து
தல், பச்சாத்தாபம்
உகுத்ததோடு - உதிர்த்த
தோடு

39 இடுக்கண் - துன்பம்
தானை - சேனை

41 மோகனுஸ்திரம் -மயங்கச்
செய்யும் அம்பு
ஒற்றர் - இரகசிய தூதர்

42 இமையவல்லிமணுளன் -
பார்வதிதேவியின் கணவ
ரான பரமசிவன்
குறையிரந்தனள் -
வேண்டிக்கொண்டனள்

43 குசாக்கிரம் - தருப்பை
நுனி

44 நயனங்கள் - நேத்திரங்
கள், கண்கள்
உவளகம் - அந்தப்புரம்,
மகளிர் வசிக்கும் இடம்
பாங்கர் - பக்கம்

45 அறச்சாலை - தருமச் சத்
திரம்

பக்கம்

தண் கதிர்ச் செல்வன் -
குளிர்ச்சி பொருந்திய கிர
ணங்களையுடைய சந்திரன்
வழக்கற்று - சஞ்சார
மின்றி
கண்வளர்ந்துகொண்டு -
தூங்கிக்கொண்டு

47 எழில் - அழகு
துயில்கூர்கிறுன் - தூங்கு
கிறுன்
ஐயப்பாடுகள் - சந்தேகங்
கள்

48 மடம் - கபடமின்மை
பயிர்ப்பு - அருவருப்பு

50 குறிக்கோள் - நோக்கம்,
இலக்கு
உசாவினள் - வினவினள்
பரிச்சயம் - அறிமுகம்

51 நடுவண் - நடுவில்

54 மாற்றுர் - விரோதிகள்

56 வதியும் - வசிக்கும்
கண்ணிலி - குருடன்
துய்க்கும்படி - அனுபவிக்
கும்படி

57 வள்ளல் - வரையாது
கொடுப்போர்
உவகை-மகிழ்ச்சி, களிப்பு

58 அருண்மொழி - அருள்
நிரம்பிய சொல்
கான்றன - கக்கின

59 மலரவன் - பிரமன்
மருகி - மருமகள்

**பக்கம்**

60 துருவினர் - தேடிப்பார்த்தனர்

62 இலங்கின - விளங்கின
ஆனனம் - முகம்

63 மடவரல் - இளம் பெண்

64 வன்சொல் - கடுஞ்சொல்

65 எற்பாடு-சாயங்காலவேளை
பொய்கை - வாவி, குளம்

68 புலைமகன் - இழிகுலத்தோன்
எந்தை - என் தந்தை
நச்சுமரம் - எட்டி மரம்

69 நுண்மதியினள் - கூரிய புத்தியுடையவள்

71 புக்ககம் - மாமியார் வீடு
பிறந்தகம் - தாய் வீடு
மனத்திட்பம்-மனவுறுதி
கிளைஞர் - உறவினர்
சாமோபாயம்-சமாதானத்தால் வெல்லும் தந்திரம்

72 அடிசிற்சாலை-சமையலறை

73 புவியல் - பூமியில்
தமியளாகிய - தனித்தவளாகிய
கயவன் - இழிவானவன்
வில்லேருழவன் - படைவீரன்

75 பொருதனர் - சண்டை செய்தனர்
ஒன்னலர், நண்ணலர், விரவலர், அடையலர், மாற்றார், தெரியலர், எதிலர் - விரோதிகள், பகைவர். வரையறை - எல்லை; இன்னாத-துன்பகரமான. கொடிய

76 பாசறை, பாடி - போர்க்களத்தில் வீரர் தங்குமிடம்

78 எதிலர், தெரியலர் - பகைஞர்

79 சமர் - போர்

80 ஊழ் - விதி

81 அமீர் - பிரபு

82 உதிரம் - இரத்தம்
பிழம்பு-திரண்ட வடிவம்

84 எய்ப்பினில் வைப்பு - ஆபத்திலுதவும் பொருள்
விச்சின்றியே - விதையில்லாமலே
வித்தகன் - ஞானி
சொல்விளம்பி-கள், மது

86 ஆராமை - பேரன்பு
ஆகூழற்ற - நல்ல அதிர்ஷ்டமில்லாத

87 ஞாலம் - பூமி
கணையாழி - மோதிரம்
தீங்குரல் - இனிமையான குரல்

91 வில்வாதி லேகியம் - ஒரு வகை மருந்து

**பக்கம்**
லதாமாடம் - கொடிகள் படர்ந்துள்ள வீடு ; பன்ன சாலை
92 பெருமிதம் - களிப்பு
கட்டாரி - குற்றுடைவாள்
97 கலி - துன்பம்
99 விதானம் - மேற்கட்டி
100 அரி - சிங்கம்
அரியணை - அரியாதனம், சிங்காதனம்
நீடுழி - நெடுங்காலம்
கரகோஷம் - கையைத் தட்டி ஆரவாரித்தல்
நிருத்த மாதர் - நாட்டியப் பெண்கள்
வியத்தகு -வியக்கத்தக்க

**பக்கம்**
101 பரணி - ஆயிரம் யானைச் சேனைகளைக் கொன்று வெற்றிபெற்ற வீரனைப் புகழும் பாடல்
அவை - சபை
103 கோளகன் - கைம்பெண் பெற்ற பிள்ளை
மாற்றம் - சொல்
மேதினி - பூமி
105 கரகமலம் - கையாகிய தாமரைப் பூ
106 பிக்குணி - துறவி, சன்னியாசினி
107 பேறு - செல்வம்

---

ஸ்ரீ மஹாபாரதம் பிரஸ், கும்பகோணம்